# கல்கி

KALKI
3.2.2008 ரூ.8.00
80 பக்கங்கள்

குடும்பத்துடன் படிக்க...



எம்.ஜி.ஆர். யாருக்குச் சொந்தம்?



## இன்னொரு தஸ்லிமா நஸ்ரீன்?

உ

ஸ்ரீ மகாகாளி துணை





# ஆனந்தா கேட்டரிங் சர்வீஸ்

# ANANDHAA CATERING SERVICE

WE UNDERTAKE MARRIAGE & OTHER FUNCTIONS
CONTRACT ON A TO Z BASIS

**K. BALAJI** - Catering Contractor

# 37, Nagarathinammal Street, Janaki Nagar, Valasaravakkam, Chennai - 600 087.
Ph : (044) 6539 3094 Mobilie : (0) 98401 39130, 98409 39130, 92824 17287

# பீமா

**விமர்சனம்**

**வ**ழக்கமான தாதா கதைதான். ஆனால், அதனைச் சொல்லியிருக்கும் விதம் அக்மார்க் அசத்தல். அடிதடிகளுக்குள் நேசத்தை ஆழமாய் வைத்துத் தைக்கும் வித்தை அறிந்தவர் லிங்குசாமி. 'பீமா'விலும் அதனை மெய்ப்பித்திருக்கிறார்.

மனிதநேயமுள்ள ரௌடியாக வாழ்ந்திருக்கும் பிரகாஷ்ராஜ் பாத்திரம் பிரமாதமானது. கண்ணைப் பார்த்தே எதிராளியின் மனம் அறியும் குணம், விக்ரமிடம் அவர் காட்டும் பாசம், அந்தத் தெனாவெட்டு எல்லாமே அழகுணர்ச்சியோடு வெளிப்பட்டிருக்கின்றன. அவரின் ஆத்மார்த்த தோழனாய் விக்ரம். 'பீமா'வுக்கேற்ற கச்சித உடல் வாகு. ஆர்ப்பாட்டமாய் அரங்கேறும் அடிதடிகள் ஒவ்வொன்றும் மிரட்டல் அத்தியாயங்கள். காதல் நுழைந்ததும் கனோபரமாகும் விக்ரம், பிரகாஷை மறந்து குழந்தையாகி விளையாட, 'எங்கேடா போன' என்ற கலவரக் குரலுக்கு அவர் வெளிப்படுத்தும் நடிப்பில் துடிப்பு அதிகம். த்ரிஷா காதல் புயல். கூரையிலிருந்து குதித்தவனை நினைத்து ஸ்டேஜில் கோட்டை விடுவதும், துப்பாக்கிக் காட்டி ரவுடிகளை மிரட்டுவதும் கொள்ளை அழகு.

ராத்திரியோடு ராத்திரியாக ரகுவரனை இடமாற்றி மிரட்டுவது, பிரகாஷுக்கு மணமுடிப்பது, எதிர்பாராத அந்த க்ளைமேக்ஸ் என்று திகைக்க வைக்கும் திருப்பங்கள் படம் முழுக்க நம்மைக் கட்டிப் போடுகின்றன.

ஹாரிஸ் ஜெயராஜின் இசை, ரம்யமும் ரகசியமும் கலந்த இதமான தென்றல். 'முதல் மழை'க்கு முதல் தரம்! கனல் கண்ணன் காலரைத் தூக்கி விட்டுக்கொள்ளலாம். சண்டைக் காட்சிகளுக்குப் பிரத்யேகப் பாராட்டுகள். ஆண்டனி எடிட்டிங் படத்தை பரபரவென்று நகர்த்த உதவியிருக்கிறது. இருட்டு, வெளுப்பு என்று இடியாய் இறங்கியிருக்கிறது ஆர்.டி.ராஜசேகரின் கேமரா. அண்டர் கிரவுண்ட் ரவுடியிசத்தை அனல் தகிக்கக் காட்டியிருக்கிறார். எஸ்.ராமகிருஷ்ணனின் வசனங்கள் கரீர் ரகம்.

லிங்குசாமியின் உழைப்பு படம் முழுக்க விரவிக் கிடக்கிறது. பார்த்துச் சலித்துப் போன ரவுடி கதையைக்கூட, உணர்வுகளுக்கு முக்கியத்துவம் தந்து, ரத்தமும் சதையுமாகச் சொல்லியிருக்கிறார். எல்லா டெக்னீஷியன்களும் அவருக்கு மிக இதமாகக் கைகொடுத்திருக்க, பீமா, லேட்டாக வந்தாலும் க்யூட்டான என்ட்ரி!

– சுந்தரி





ப்ரிஸ்கிரிப்ஷன்

# குழந்தைகளை இம்சிக்காதீர்கள்!

குழந்தைக்கு டயபர் அணிவிக்கிறேன். 'வெளியே போகும்போது மட்டுமே இதை அணிவிக்க வேண்டும். மற்றபடி இதைப் பழக்கமாக்கக் கூடாது. இதனால் தொற்று நோய்கள் உண்டாகலாம்' என்று என் தோழி பயமுறுத்துகிறாள். இது உண்மையா? தவிர, ஒரு டயபரை எவ்வளவு நேரத்துக்குப் பயன்படுத்தலாம்?

– ஆர்.செல்வி, சென்னை - 60

*குழந்தை நல மருத்துவர் டாக்டர் நிகிலா ஷர்மா :*

டயபர் என்பது மிருதுவான பருத்தியால் ஆன டிஷ்யூ. எனவே சிறுநீரை அது உறிஞ்சிக்கொள்கிறது. குழந்தை ஈரமாகாமல் இருக்க அது உதவுகிறது.

மேலை நாடுகளில் ஒருமுறை டயபர் அணிவித்தால் அது நான்கைந்து முறை சிறுநீர் கழித்தால்கூட தாங்குகிறது. இதனால் எந்தவிதத் தொற்றுக் கிருமிகளும் குழந்தைக்குப் பரவுவ இல்லை.

இங்கு பலரும் இரவு தொடங்கும்போது குழந்தைக்கு டயபர் அணிவித்துவிட்டுக் காலையில்தான் அதை நீக்குகிறார்கள். அதற்குள் நான்கைந்து முறை சிறுநீர் கழித்திருக்கலாம். நம் நாட்டில் சிறுநீரில் உள்ள உப்பின் அளவு அதிகமாக இருக்கிறது. தவிர, நம் நாட்டில் காற்றில் ஈரப்பதம் அதிகம். பாக்டீரியா கிருமிகள் இங்கு வேகமாகப் பரவுகின்றன. எனவே ஒருமுறை சிறுநீர் கழித்தவுடனேயே அந்த டயபரை நீக்கிவிடுவதுதான் புத்திசாலித் தனம். ஒரு டயபரின் விலை சுமார் பத்து ரூபாய் எனும்போது, நமக்குக் கட்டுப்படியாகுமா என்று அந்தந்த பெற்றோர்தான் தீர்மானித்துக்கொள்ள வேண்டும். மற்றபடி மருத்துவக் கோணத்தில், ஒரே டயபரில் தொடர்ந்து சிறுநீர் கழித்தால் தொற்றுக் கிருமிகளின் பாதிப்பு உண்டாகும். சிறுநீர் கழிக்கும் பகுதியைச் சுற்றிலும் சிவந்து போகும் (இதை 'டயபர் ராஷஸ்' என்கிறார்கள்); சிறுநீர்ப் பாதையிலும் பாதிப்புகள் உண்டாகலாம். பெண் குழந்தை



● நிகிலா ஷர்மா



என்றால், இந்த பாதிப்புகள் உண்டாக வாய்ப்புகள் மேலும் அதிகம் (காரணம், டயபர் சிறுநீர்ப் பாதைக்கு வெகு அருகில் உள்ளது). எனவே, டயபரைச் சரியான முறையில் உபயோகித்து, குழந்தைகளை அனாவசிய இம்சைகளிலிருந்து காப்பாற்ற வேண்டும்.

**என் அண்ணனுக்கு எலும்பு முறிவு ஏற்பட்டது. டாக்டர் கட்டுப்போட்டு மூன்று வாரங்களாகிவிட்டன. இப்போது 'எலும்பு கூடவில்லை. எனவே போன்க்ராஃப்டிங் செய்ய வேண்டும்' என்கிறார். ஏன்? எதற்காக?**

**– ச.கண்ணன், மதுரை**

*எலும்புநல அறுவை சிகிச்சை நிபுணர் எம்.பார்த்தசாரதி :*

எலும்பு முறிவு ஏற்பட்டு குறிப்பிட்ட காலத்துக்குள் எலும்பு கூடவில்லையென்றால் போன்க்ராஃப்டிங் அவசியமாகிறது. ஒரு மதில் சுவர் உடைந்துபோயிருக்கிறது. அந்தச் சுவரைப் பழைய மாதிரியாக்க, மீண்டும் செங்கற்களை வைக்கிறோம். கிடைத்த இடைவெளிகளில் உடைந்த செங்கற்களையும் சிமெண்ட் என்ற பேஸ்ட்டையும் சரியான இடங்களில் வைத்து நிரப்பிப் பூசுகிறோம் இல்லையா, இதுபோலத்தான் போன்க்ராஃப்டிங்கும். செங்கல்லைப் பொருத்துவது போல எலும்பை இணைக்கிறோம். அப்படியானால் இடைவெளிகளை இட்டு நிரப்பும் உடைந்த செங்கல் மற்றும் பேஸ்ட் எது?

நமது உடலில் சில இடங்களில் உள்ள எலும்புகள் தேவைக்கதிகமான அளவோடும் அடர்த்தியோடும் இருக்கின்றன. 'பேஸ்ட்'டாகப் பயன்படுத்த இந்த எலும்புகளை உபயோகிக்கலாம்.

போன்க்ராஃப்டிங் மூலம் சிறிய ரத்தக் குழாய்கள் வளர்ந்து புதிய எலும்புத் திசுக்களை உருவாக்குகின்றன. அந்த இடம் நன்கு 'கொத்தப்பட்டு' வேறு குறிப்பிட்ட பகுதியிலிருந்து எடுக்கப்பட்ட எலும்புத் துருவல் பூசப்படுவதால், அது ஒருவித ஊக்கம் கொடுக்கும் உரமாக இந்தத் திசுக்களின் வளர்ச்சிக்கு உதவுகிறது.

**– ஜி.எஸ்.எஸ்.**




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ்**
**பிரைவேட் லிமிடெட்டிற்காக**
**பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**


தொலைபேசி :
**2225 1522, 2225 0623, 2225 1324**

தொலைநகல் :
**044 - 22251021**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com


சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 440/-**
**ஆறு மாதம் : ரூ. 220/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# இன்னொரு தஸ்லிமா

**கவிஞர் சல்மா - வார்த்தைக்கும் வாழ்க்கைக்குமான இடைவெளியைக் குறைக்க முற்படுகிற இலக்கியவாதிகளில் முக்கியமானவர். தாம் சார்ந்திருக்கிற சமூகத்தின் பிற்போக்குச் சிந்தனைகளைக் கேள்விக்குள்ளாக்கத் தவறாதவர். சிறுகதை ஆசிரியர், நாவலாசிரியர், அரசியல்வாதி எனப் பல பரிமாணங்கள் உடையவர். 'லிட்ரேச்சர் ஃபெஸ்டிவல்' என்கிற இலக்கிய நிகழ்ச்சிக்காக ஜெய்ப்பூர் கிளம்பும் அவசரத்தில் இருந்தவரைச் சந்தித்தோம்...**

**நீங்கள் எழுத வந்ததன் பின்னணி என்ன?**

''அதிகப்படியாகப் படிப்பதற்கே அனுமதிக்கப்படாத சமூகச் சூழலில் வளர்ந்த பெண் நான். அப்படிப்பட்ட இக்கட்டான சூழ்நிலையில் எழும் மனப் புழுக்கங்களைப் போக்கிக்கொள்ளும் நிகழ்வாக வாசிப்பு எனக்குப் பட்டது. வாசிக்க வாசிக்க சமூகத்தின் கட்டுமானங்களில் உள்ள அவலங்கள் எனக்குப் புலப்பட ஆரம்பித்தன. நான் உணர்ந்ததை இறக்கி வைக்க வேண்டிய சூழலில், எனக்கு எழுத்து வசதியாகப்பட்டது.''

**உங்கள் படைப்புகளில் பெரும்பாலும் இஸ்லாமிய சமூகத்தின் மீது விமர்சனங்களை முன் வைக்கிறீர்களே ஏன்?**

''நான் எந்தச் சமூகத்தைச் சார்ந்திருக்கிறேனோ அதைப் பற்றியும், அதன் நிலையைப் பற்றியும்தானே எனது படைப்புகள் இருக்க முடியும்? பொதுவாக பெண் சமூகத்தின் நிலைப்பாட்டைப் பற்றியே எனது கருத்துகள் அமையும். இஸ்லாமிய சமூகத்துக்கு மட்டுமல்லாது பெண் குலத்துக்கான எனது நிலையாகத்தான் விமர்சனங்களை எடுத்துக்கொள்ள வேண்டும்.''

**இஸ்லாமிய சமூகத்தில் பெண்களின் நிலைதான் என்ன?**

''பெண்கள் அனைவரும் தம்முடைய வாழ்க்கையைத் தாமே தீர்மானிக்க இயலாத அவலமான சூழ்நிலையில்தான் வாழ்ந்து வருகின்றனர் என்பது சுடுகிற உண்மை. ஒட்டுண்ணிகள் போன்று எவற்றையாவது சார்ந்தே வாழவேண்டி இருக்கிறது. இது பொதுவான நிலை. ஆனால், இது இஸ்லாமியப் பெண்களுக்கும் பொருந்தும்.''



''எதிர்ப்பு என்பது நாம் சரியான நிலையைத்தான் எடுத்திருக்கிறோம் என்பதற்கான அடையாளம்''

**உங்கள் கருத்துகளுக்கு எழும் எதிர்ப்புகளை எப்படிப் பார்க்கிறீர்கள்?**

''காலங்காலமாக இருந்து வரும் சமூகக் கட்டுமானங்கள் மீது விமர்சனங்களை முன்வைக்கும்போது எதிர்ப்புகள் எழுவது சகஜம். எதிர்ப்பு என்பது நாம் சரியான நிலையைத்தான் எடுத்திருக்கிறோம் என்பதற்கான அடையாளம். எதிர்க்கிறார்கள் என்பதற்காக என்னுடைய கருத்தை என்னால் குறுக்கிக்கொள்ள முடியாது.

நிறைய எதிர்ப்புகளுக்கு ஆளாகியிருக்கிறேன். அதே போல வரவேற்புகளும் கிடைத்துள்ளன. அத்தனை எதிர்ப்புகளும் ஆக்கபூர்வமாக மாறும் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருக்கிறேன்.''

**படைப்புகளுக்கு உங்கள் சொந்த அனுபவம்தான் அடிப்படையா?**

''எந்த ஒன்றையும் அனுபவிக்காமல் வெளிப்படுத்த முடியாது. எனது படைப்புகளில்

# நஸ்ரீன்?

என் சொந்த அனுபவங்களும் கலந்தேதான் இருக்கின்றன. மற்ற பெண்களுக்கு நடந்த அனுபவங்களையும் எனது படைப்புகளில் கலந்து கொடுத்திருக்கிறேன். நான், நீங்கள் என எல்லாம் சேர்ந்ததுதானே சமூகம். சமூகமும், படைப்பும் வேறுவேறல்ல.''

**உங்கள் செயல்பாடுகளுக்குக் குடும்பத்தின் ஆதரவு சரியான முறையில் இருந்ததா?**

''எழுத ஆரம்பித்தபோது சில கட்டுப்பாடுகள் இருந்தன. சமூகமும் எதிர்க்கவே செய்தது. ஆனால், என்னுடைய நிலைப்பாடு குறித்து குடும்பத்தினருக்கு எடுத்துச் சொல்லி ஏற்றுக்கொள்ளச் செய்தேன். அது எனக்குக் கிடைத்த மிகப்பெரிய வெற்றி. இதேபோல் எல்லா இஸ்லாமியப் பெண்களின் வாழ்க்கையும் வெளிச்சத்துக்கு வரவேண்டும். தங்கள் நிலை குறித்து அவர்களுக்கு விழிப்புணர்வு வரவேண்டும்.''

**இப்படியெல்லாம் கருத்துச் சொல்லி இன்னொரு தஸ்லிமா நஸ்ரீன்**

> "எனக்குத் தேர்தலில் சீட் கிடைக்க கனிமொழி சிபாரிசு செய்திருக்கலாம்..."

**ஆக ஆசையா?**

''அவர் அளவுக்குச் சுதந்திரமாகக் கருத்துச் சொல்லக்கூடிய சமூகச் சூழல் எனக்கு மட்டுமல்ல, எந்தப் பெண் படைப்பாளிக்குமே இல்லை. மேலும், எனது படைப்புலகம் என்பது வேறு. என்னை அவரோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை. மற்றபடி எனக்கு தஸ்லிமா நஸ்ரீன் ஆகும் ஆசையென்பது துளிக்கூட இல்லை.''

**ஒரு குறிப்பிட்ட அரசியல் இயக்கத்தைச் சார்ந்திருப்பதால் உங்கள் படைப்புச் சுதந்திரம் பாதிக்கப்படுகிறதா?**

''கண்டிப்பாக இல்லை. இலக்கியவாதியாக மட்டும் இருந்தபோதைவிட அரசியல்வாதியாக மாறிய பிறகுதான், என்மீது அதிகமான வெளிச்சம் பட்டது. என் படைப்புகள் பரவலாகப் படிக்கப்பட்டு பாராட்டுக்கும் விமர்சனத்துக்கும் உள்ளாயின. எனவே, நான் சார்ந்திருக்கிற இயக்கம், என் இலக்கிய ஆர்வத்தை வளர்த்திருக்கிறதே தவிர மட்டுப்படுத்தவில்லை.''

**அரசியல்... இலக்கியம்...?**

''இலக்கியத்தில் முன் வைக்கக்கூடிய சமூகக் கருத்துகளுக்குச் செயல் வடிவம் கொடுக்கும் களமாக அரசியலை நான் கருதுகிறேன். முதலில் எனக்கு அரசியலுக்கு வரும் எண்ணமே இல்லை. பெண்களுக்கென்று ஒதுக்கப்பட்ட தொகுதி என்பதாலும், என் கணவர் தி.மு.க. இளைஞரணியில் இருப்பதாலும், எனக்குத் தேர்தலில் போட்டியிடும் வாய்ப்பு வந்தது. துவரங்குறிச்சி பேரூராட்சி தலைவியாக என்னுடைய செயல்பாடுகள் பிடித்துப்போக, தலைவர் கலைஞர் எனக்கு வாய்ப்பளித்தார்.''

**அப்படியானால், உங்களைப் போன்ற இஸ்லாமிய பெண்கள் அதிகளவில் அரசியலுக்கு வருகிறபோது, உங்கள் சமூகம் சார்ந்த பெண்களுக்குக் கல்வி உரிமை மலரும் அல்லவா?**

''கண்டிப்பாக. இஸ்லாமிய சமூகத்து பெண்களுக்கு மட்டுமல்லாது, எல்லா சமூகத்துப் பெண்களுக்கும் ஓர் உந்து சக்தியாக அது இருக்கும். அதற்கான எல்லா முயற்சிகளையும் சமூக நல வாரியம் சார்ந்து எடுத்து வருகிறோம்.''

**கனிமொழியின் தோழி என்பதால்தானே தேர்தலில் போட்டியிடும் வாய்ப்புக் கிடைத்தது?**

''கவிதை மூலமே எனக்கு கனிமொழி தோழியானார். அவரது எளிமை என்னை ஈர்த்தது. போகப்போக அவரது ஆளுமை என்னைக் கவர்ந்தது. தேர்தல் சீட் கிடைக்க கனிமொழி சிபாரிசு செய்திருக்கலாம். அது மட்டுமல்லாது பல்வேறு காரணங்களும் இருந்திருக்கலாம். இறுதியாக தலைவர் கலைஞர் முடிவே எனக்கு சீட் கிடைக்க வழி வகுத்திருக்கும்.

**– கதிர்பாரதி**

அட்டை மற்றும் படங்கள்: **ஸ்ரீஹரி**

---

**ஜடி கிரிப்ஸ்**

''என்னப்பா திடீர்னு கார் ஷெட் கட்டுறே?''

''மலிவு கார் வந்துடுச்சி. யார் கண்டாங்க! அடுத்த வருஷம் அரசாங்கம் இலவச கார் தந்தாலும் தரலாம். நிறுத்த இடம் வேண்டாமா!''

**-கே.என்.சுப்பிரமணியன்**



ந்த வருட எம்.ஜி.ஆர். பிறந்த நாள் கொண்டாட்டங்கள், பெரியதொரு சர்ச்சைக்குப் பிள்ளையார் சுழி போட்டுவிட்டன. வெகு நாட்களுக்குப் பிறகு எம்.ஜி.ஆரின் பிறந்த நாளன்று ராமாவரம் தோட்டம் சென்ற ஜெ., ''எம்.ஜி.ஆரின் உண்மையான வாரிசு நாம்தான். அதில் யாரும் இந்த உலகில் உரிமை கொண்டாட முடியாது. வேறு யாராவது நாங்கள்தான் எம்.ஜி.ஆர். வாரிசு என்று சொன்னால் மக்கள் எள்ளி நகையாடுவார்கள். சிலருக்குப் பித்தம் தலைக்கேறியிருக்கிறது' என்று ஆவேசமாகப் பேசியிருக்கிறார்.

ஜெ.வால் இப்படி இடித்துரைக்கப்பட்டவர்கள், எம்.ஜி.ஆரை வைத்து அரசியல் நடத்தி வரும் விஜயகாந்தும், சரத்குமாரும்தான் என்பது யாவரும் அறிந்ததே. அதிலும் தேர்தலைச் சந்தித்து, தமது வாக்கு வங்கியை நிரூபித்துவிட்ட விஜயகாந்தே ஜெ.வின் முதல் குறி என்பது அரசியல் வட்டாரக் கணிப்பு.

''எம்.ஜி.ஆரின் வோட்டு வங்கி விஜயகாந்துக்கு ஆதரவாகத் திரும்புகிறது என்பது மதுரையில் நடந்த இடைத் தேர்தல்கள் மூலமாகத் தெரிகிறது. எம்.ஜி.ஆரின் பெயரை ஜெயலலிதா இருட்டடிப்பு செய்ய முயன்றதன் விளைவுதான் இது'' என்கிறார் மூத்த பத்திரிகையாளர் சோலை. ஒரு கட்டத்தில் இவர் ஜெயலலிதாவுக்கு ஆலோசகராகவும் இருந்திருக்கிறார்.

''திருநாவுக்கரசு, எம்.ஜி.ஆர். அ.தி.மு.க. என்ற தனிக் கட்சியை நடத்தியபோது, தமிழகத்தில் 56 இடங்களில் எம்.ஜி.ஆர். சிலையைத் திறக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்தார். அவரது மனத்தை மாற்றி, கட்சியைக் கலைக்கச் செய்து, சிலைகளைத் திறக்கவிடாமல் செய்தவர் ஜெ. அவ்வளவு ஏன்? சமீபத்தில் எம்.ஜி.ஆர். பிறந்த நாள் மலர் வெளியிட்ட நமது எம்.ஜி.ஆர். இதழில், 22 பக்கங்கள் ஜெ. படம்

# எம்.ஜி.ஆர். யாருக்குச் சொந்தம்



**எம்.ஜி.ஆர். பெயரில் இருந்த ஃபிலிம் சிட்டியைத் தமது பெயருக்கு மாற்றினார் ஜெ!**

கள்தான். நரேந்திர மோடிக்கு விருந்து வைத்த ஜெ., எம்.ஜி.ஆருக்கு வாரிசாகவே முடியாது. முன்பு ஜனா.கிருஷ்ணமூர்த்தி எம்.ஜி.ஆரைச் சந்திக்க விருப்பம் தெரிவித்து, பல முறை என்னை அணுகியபோது, 'வேண்டாம், அவரை நாம் சந்திப்பது தவறான சிக்னலைக் கொடுக்கும்' என்று மறுத்து விட்டவர் எம்.ஜி.ஆர்.'' என்கிறார் சோலை.

**கா**ந்தி, நேரு, ராஜாஜி, காமராஜர், அண்ணா போன்றோரின் பிறந்த நாள் மற்றும் நினைவு நாளின்போது அவர்களது சிலைக்கும், படங்களுக்கும் மாலை அணிவித்து மரியாதை செய்து, அவர்கள் செய்த சிறப்பான பணிகள் குறித்துப் பேசுகிறபோது எந்த விமர்சனங்களும் எழுவதில்லை. ஆனால், விஜயகாந்தை அவரது கட்சியினர் 'கறுப்பு எம்.ஜி.ஆர்.' என்று அழைப்பதைத்தான் ஜெ.வால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை.

''ஒரு கட்சி துவங்கி நடத்துபவர்களுக்குத்தான் அதன் வலி தெரியும். ஜெயலலிதாவுக்கு அது தெரிய வாய்ப்பில்லை. அவர்தான் எம்.ஜி.ஆர். துவக்கிய அ.தி.மு.க.வை ஹைஜாக் செய்துவிட்டாரே'' என்று கடுமையாகச் சாடுகிறார் சமத்துவ மக்கள் கட்சியின் தலைவரான சரத்குமார்.

''நான் கல்லூரி மாணவனாக இருந்த காலம்தொட்டே எம்.ஜி.ஆர். ரசிகன். 'சூரிய வம்சம்' படத்துக்காக கலைஞரிடம் எம்.ஜி.ஆர். விருது பெற்றவன். 1972ல் எம்.ஜி.ஆர். கட்சி துவக்கியபோது நடைபெற்ற ஊர்வலத்தில் பங்கேற்றவன். மக்கள் மனத்தைக் கவர்ந்த அந்த மாமனிதரை நாங்கள் போற்றுகிறோம். எம்.ஜி.ஆர். ரசிகர் மன்றத் தலைவராக இருந்த முசிறிபுத்தனின் மகன்கூட எங்கள் கட்சியில் இணைந்திருக்கிறார். தாங்கள்தான் வாரிசு என்று சொல்லும் ஜெயலலிதா, எம்.ஜி.ஆர். புகழைப் பரப்ப முயற்சி செய்யாமல் மறைக்க முயற்சி செய்தவர். எம்.ஜி.ஆர். பெயரில் இருந்த ஃபிலிம் சிட்டியைத் தம் பெயருக்கு மாற்றினார். தன் கலையுலக வாரிசு என்று பாக்யராஜை அறிவித்த எம்.ஜி.ஆர்., ஜெயலலிதாவை ஏன் அரசியல் வாரிசாக அறிவிக்கவில்லை? எம்.ஜி.ஆரால் வளர்க்கப்பட்ட முக்கியமான தளபதிகள் யவர் இவருடன் இல்லாதபோது, எம்.ஜி.ஆர். இயக்கம்

# "எம்.ஜி.ஆர். சிலையில் தே.மு.தி.க. கொடியைக் கட்டும் அராஜகத்தைத் தடுத்து நிறுத்துவோம்!"

இவரிடம்தான் இருக்கிறது என்று சொல்வது எப்படிச் சரியாகும்?'' என்று கேள்வி எழுப்புகிறார் சரத்குமார்.

**ச**மீபத்தில் ஒரு தனியார் தொலைக்காட்சி நடத்திய கணிப்பில், தமிழகத்தின் முப்பத்தொரு சதவிகித மக்கள் இன்னமும் எம்.ஜி.ஆரை நினைவில் வைத்துப் போற்றுகிறார்கள் என்பது தெரிய வந்திருக்கிறது. இந்த வோட்டு வங்கியை, புதிதாகக் கட்சி துவங்கியுள்ள விஜயகாந்தும், சரத்குமாரும் தள்ளிக் கொண்டுபோய் விடக்கூடாது என்கிற அச்சத்தில் இருக்கிறது அ.தி.மு.க.



■ விஜய டி.ராஜேந்தர்

''எம்.ஜி.ஆரை வைத்து அரசியல் லாபம் அடைய முயன்றால், அதைத் தடுக்க வேண்டிய கட்டாயம் எங்களுக்கு இருக்கிறது. எம்.ஜி.ஆர். சிலையில் தே.மு.தி.க. கொடியைக் கட்டும் அராஜகத்தைத் தடுத்து நிறுத்துவோம்'' என்கிறார் அ.தி.மு.க. தேர்தல் பிரிவுச் செயலாளர் பொள்ளாச்சி ஜெயராமன்.

''புரட்சித் தலைவர் அமெரிக்காவில் சிகிச்சை பெற்றுக்கொண்டிருந்தபோது, 'அவர் உடல்தான் சென்னை வரும்' என்று இழிவாகப் பிரசாரம் செய்தது தி.மு.க. அப்போது பட்டிதொட்டியெங்கும் சுற்றுப் பயணம் செய்து, புரட்சித் தலைவர் இயக்கத்தை வெற்றியடைய வைத்தவர் புரட்சித் தலைவி. கலைஞர் தலைமையில் திருமணம் செய்துகொண்டு, கலைஞருக்குத் தங்கப் பேனா பரிசளித்து மகிழ்ந்தவர் விஜயகாந்த். ஆனால், பல சதிகளையும் தடைகளையும் எதிர்கொண்டு கட்டுக்கோப்பாக புரட்சித் தலைவர் இயக்கத்தை வழிநடத்தி வருபவர் புரட்சித் தலைவி. சத்துணவுத் திட்டத்துக்குப் புரட்சித் தலைவர் பெயரை வைத்தது மட்டுமில்லாமல், தி.மு.க அரசால் கவனிக்கப்படாமல் இருந்த புரட்சித் தலைவர் நினைவிடத்தையும் சீர்திருத்தியவர். அவரே தலைவரின் அரசியல் வாரிசு'' என்று உறுதியாகச் சொல்கிறார் ஜெயராமன்.

''**இ**ப்போ சரியோ, அ.தி.மு.க.வைத் தூக்கி நிறுத்தியதில் ராமாவரம் தோட்டத்துக்கும், போயஸ் தோட்டத்துக்கும் பங்கு உண்டு'' என்று சொல்லி ஆச்சர்யப்பட வைக்கிறார் இலட்சிய தி.மு.க. என்று தனி இயக்கம் நடத்தி வரும் விஜய டி.ராஜேந்தர்.

''1984ல் எம்.ஜி.ஆர். உடல் நிலை சரியில்லாத காலம் தொட்டே பல சோதனைகளைத் தாண்டி இயக்கத்தைக் கட்டுக்கோப்பாக வைத்திருக்கிறார் ஜெ. எம்.ஜி.ஆரின் அணுகுமுறையில் முக்கியமானது; அடிநாதமானது கலைஞர் எதிர்ப்பு. அதை இன்றுவரை உறுதியாகக் கடைபிடிக்கும் ஜெ., எம்.ஜி.ஆரின் வாரிசுதான்.

ஆர்.எம்.வி., திருநாவுக்கரசு, ஜெகத்ரட்சகன் போன்றோர்கூட கலைஞருடன் சமரசமாகப் போய்விட்டார்கள். ஜெ. செய்த தவறு, எம்.ஜி.ஆர். புகழை மறைக்கும் வகையில் செயல்பட்டதுதான். ஒரு மாமாங்க காலம் அவருக்கு ராமாவரம் தோட்டத்துக்கு வழி தெரியாமல் இருந்தது. இடையில் எங்கே கேட்கப் போனார் வரம்? ஏன் மறந்தது ராமாபுரம்?'' என்கிறார் ராஜேந்தர்!

**ச**ரி, இதற்கெல்லாம் விஜயகாந்தின் பதில் என்ன?

''எம்.ஜி.ஆர். தன்னுடைய வாரிசு என்று யாரையும் சொன்னது கிடையாது. மக்களைத்தான் வாரிசு என்றார். எம்.ஜி.ஆரை மானசீக குருவாக ஏற்றுக் கொண்டுள்ளேன். மக்கள்தான் என்னை 'கறுப்பு எம்.ஜி.ஆர்.' என்று அன்புடன் அழைக்கிறார்கள். நான் அதுபோல் சொல்லிக்கொள்வதில்லை. எம்.ஜி.ஆர். செய்ததுபோல நானும் என் வருமானத்தில் நிறைய நல்ல காரியங்களைச் செய்து வருகிறேன். ஜெயலலிதா அதுபோல் ஏதேனும் செய்ததுண்டா?

எனக்குப் பித்தம் தலைக்கேறியிருப்பதாகச் சொல்கிறார். உண்மையில் அவருக்குத்தான் ஏறியிருக்கிறது. திடீர் தலைவர்கள் உருவாவதாகவும் சொல்கிறார். ஆனால், ஆக்ஸிடெண்டாகத் தலைவரானவர் ஜெயலலிதாதான்!'' என்று கொந்தளித்தவரிடம், 'தேர்தலின்போது எம்.ஜி.ஆர். படத்தைப் பயன்படுத்துவீர்களா?' என்ற கேள்வியை முன் வைத்தோம்.

''எம்.ஜி.ஆர். அவர்கள் என்னுடைய மானசீக குரு என்று சொல்லியிருக்கிறேன். எனவே உங்கள் கேள்விக்கான பதில் அதிலேயே அடக்கம்'' என்றார் விஜயகாந்த்.

● சோலை



**எ**ம்.ஜி.ஆர். தனக்குத்தான் சொந்தமென்று யார் வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளலாம். ஆனால், அதனை நிர்ணயிக்க வேண்டியது மக்கள்தான் என்பதை அவர்கள் மறந்து போய் விடுகிறார்கள்!

**- ப்ரியன்**



● விஜயகுமார்

# "அப்பாவைக்

அலங்காநல்லூர் தவிர, தமிழ்நாட்டின் பிற பகுதிகளில் நிகழ்ந்த ஜல்லிக்கட்டுகளில் உச்சநீதிமன்ற நிபந்தனைகள் முழுவதும் கடைபிடிக்கப்படவில்லை. விளைவு, இந்த வருடமும் உயிர்ப்பலி தொடர்கிறது. மாடு பிடிப்பவர்களைவிட வேடிக்கை பார்த்தவர்களே இதுவரை அதிக எண்ணிக்கையில் உயிர் இழந்திருக்கின்றனர்.

தஞ்சை அருகே திருக்கானூர்பட்டி கிராமத்தில் நடந்த ஜல்லிக்கட்டில் மாடு பிடி வீரர்கள் பலருக்குக் காயம். புதுக்கோட்டை மாவட்டம் நெற்குப்பை கிராமத்திலிருந்து வேடிக்கை பார்க்க வந்த இருபத்தெட்டு வயது இளைஞர் ஜஸ்டின் இறந்துவிட்டிருக்கிறார். சூரியூர் ஜல்லிக்கட்டில் சுமார் நாற்பது பேருக்குக் காயம் ஏற்பட, வேடிக்கை பார்க்க வந்த மூன்று நபர்களுக்கு மாடு முட்டி குடல் சரிந்து போனது. இதில் நல்லையன் என்பவர் மரணமடைந்துவிட்டார்.

நல்லையன் வீட்டுக்கு நாம் சென்றிருந்தபோது, தலைவிரி கோலமாய் தமது பிள்ளைகளை அணைத்தபடி அழுதுகொண்டிருந்தார் அவரது மனைவி பழனியம்மாள்.

"வேடிக்கை பார்த்துட்டு வர்றேன்னு போனவருதான்... இப்படி மாண்டு போயி, மனுசன் பொணமா வருவாருன்னு நான் கனவுலயும் நெனைக்கலியே..." மார்பிலும் வயிற்றிலும் மாறி மாறி அடித்துக்கொண்டு பழனியம்மாள் அழுததைக் கண்கொண்டு பார்க்க முடியவில்லை. பக்கத்தில் பத்து வயதில் ஒரு பையன், ஏழு மற்றும் நான்கு வயதுகளில் பெண் பிள்ளைகள். குடிசை வீட்டு வாசம்.

"விவசாயக் கூலி வேலைக்குப் போயிட்டு வருவாரு. ஆளு மொகத்தையும் மீசையும் பாத்தா மிலிட்டரி மேன் மாதிரி இருப்பாரு. எம் மேலயும், புள்ளைங்க மேலயும் ரொம்பப் பாசமா இருப்பாரு. அப்பாவைக் காணமேன்னு எம் புள்ளைங்க அழுதுக்கிட்டே இருக்குதுங்க.

என்னைய வாசலைத் தாண்ட விடாம வெச்சிருந்தாரு. இங்கன பக்கத்துல கடைங்க ஏதுமில்ல. உப்பு, புளி வேணுமா... எண்ணெய் வேணுமா.. அவருதான் எல்லாத்தையும் வாங்கியாந்து போடுவாரு. இந்த மூணு



புள்ளைங்களையும் காப்பாத்திக் கரை சேர்க்க இனி என்ன பண்ணப் போறேன்னு எனக்கே ஒன்னும் விளங்கலை. மனுசன் உயிருக்கு உலை வைக்கிற இந்தப் பாழாப்போன ஜல்லிக்கட்டு தேவையா சாமி? அரசாங்கம் இன்னும் ஏன் கம்மா கெடக்கு? ஜல்லிக்கட்டுல சவுடுறவங்க தயவுசெஞ்சு



● குழந்தைகளுடன் பழனியம்மாள்...

விபத்துகளில் மரணம் அடைவோரின் குடும்பங்களுக்கு அரசு நிதியுதவியும் ஆயுள் காப்பீடும் கிடைக்கின்றன. ஜல்லிக்கட்டு விளையாட்டில் உயிர்ப்பலி ஆகிறவர்களுக்கு எவ்வித நிவாரணமும் கிடைப்பதில்லை.

# காணோம்!”

## -தொடரும் ஜல்லிக்கட்டு சோகம்

மனைவி, மக்களோட வேதனையப் புரிஞ்சுக்கணும்'' என்று பழனியம்மாள் ஆவேசமாகப் பேசப் பேச, அவரது ஆக்ரோஷத்தைப் பார்த்து, பயந்து நடுங்கிப்போய் அமர்ந்திருந்தன அவரது பிள்ளைகள். கண்களில் அப்பாவை இழந்த சோகம் வறண்டு கிடக்கிறது.

‘‘நவீன விஞ்ஞான, பொருளாதார மாற்றங்களுக்கு ஏற்ப நம் வாழ்க்கையை மாற்றியமைத்துக்கொண்டு வருகிறோம். கிராமப்புறங்களில் கம்மங்கூழ் குடித்து உடல் பலம் வளர்த்து, காளைகளை அடக்கியது அந்தக் காலம். அதனை நாம் மறுப்பதற்கில்லை. இன்றைக்கு கிராமத்து மளிகைக் கடையில் கம்ப்யூட்டர் பில் வந்துவிட்டது. ஏறு தழுவுதல், மாப்பிள்ளைக் கல் தூக்குதல் எல்லாம் வழக்கொழிந்துபோய்விட்டன. நாம் இன்னமும் ஏனிந்த ஜல்லிக்கட்டு வினையை விடாமல் தூக்கிக்கொண்டிருக்கிறோம்?'' என்று வருத்தப்பட்டுப் பேசினார் சமயபுரம், இந்திய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் ஊழியர் சரவணன்.

''பேரிடர்களில் உயிர் இழப்போர், ஒவ்வோர் ஆண்டும் ஜல்லிக்கட்டில் மரணமடைவோர், படுகாயங்கள் ஏற்படுவோர் குறித்தான முழு விவரங்கள் வெளி வருவதில்லை. சமீபகாலமாக கிராமங்களில் கால்நடை வளர்ப்பும், அவற்றின் எண்ணிக்கையும் வெகு அளவில் குறைந்து வருகின்றன. இது மனித சமூக வாழ்வின் இயற்கைக்கு முரணானது. பக்தர்கள் திருக்கோயில்களுக்கு நேர்ந்து விடும் மாடுகள், சரிவர பராமரிப்பின்றி மனிதர்களுக்கு மாட்டிறைச்சியாக மாறி வரும் அவலமும் நிகழ்ந்து வருகிறது. கால்நடைகளின் மீதான ஜீவ காருண்யமும், மனிதர்கள் மீதான மனிதநேயமும் மலர்ந்திட வேண்டி, ஜல்லிக்கட்டு தடை செய்யப்படுவதே சாலச் சிறந்தது!'' என்கிறார் பிராணிகள் நல சேவகரும், திருச்சி அமிர்தம் சமூக சேவை அறக்கட்டளையின் நிறுவனருமான விஜயகுமார்.

● சரவணன்



செய்திச் சித்திரம் : **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# கல்கி




2008 பிப்ரவரி 3
சர்வஜித் தை 20
மலர் : 66
இதழ் : 27


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- *பாரதியார்*

## விடுதலைப் புலிகளின் கொடிய சாதனை!

'**உ**லகின் பயங்கரவாத அமைப்புகளிலேயே மிகப் பயங்கரமானது எல்.டி.டி.ஈ' - இப்படிச் 'சான்றிதழ்' வழங்கியிருக்கிறது அமெரிக்க உளவுத் துறையான எஃப்.பி.ஐ. அல்கைதா உள்பட பல்வேறு பயங்கரவாத அமைப்புகளுக்கு உந்துசக்தியாக இருந்து உதவியும் வருகிறது விடுதலைப் புலிகள் அமைப்பு என்பதையும் எஃப்.பி.ஐ. எடுத்துக் காட்டியிருக்கிறது. 'மனித வெடிகுண்டுகளைக் 'கச்சிதப் படுத்தி', பெண்களைத் தற்கொலைப் படையினராக்குவதில் முன்னணி வகித்து, தற்கொலைக்கான 'பெல்ட்'டை உருவாக்கி, கடந்த இரண்டு ஆண்டுகளில் மட்டுமே நான்காயிரம் பேரைக் கொன்று, இரண்டு சாவதேச தலைவர்களையும் படுகொலை செய்திருக்கிறது எல்.டி.டி.ஈ. வேறெந்த பயங்கரவாத அமைப்பும் எட்டிப் பிடிக்காத சாதனை இது' என்று எஃப்.பி.ஐ.யின் இணைய தளம் அறிவிக்கிறது.

ஆனால், நம் நாட்டிலோ, தமிழர் நலன் என்ற பெயரில் விடுதலைப் புலிகள் இயக்கத்துக்கு அனுதாபம் பெருகி, வெளிப படையான ஆதரவாகவே மாறியிருக்கிறது. பா.ம.க. நடத்தும் மாநாட்டில் விடுதலைப் புலிகளின் பிரசார சி.டி.க்களும் வி.சி.டி.க் களும் பகிரங்கமாக விற்கப்படுகின்றன.

வைகோ, ராமதாஸ், திருமாவளவன், நெடுமாறன் போன்ற அரசியல் தலைவர்கள் விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாகப் பேசி வருகின்றனர்.

இலங்கை அரசின் அழைப்பை ஏற்று, இந்தியப் பிரதமர் இலங்கை செல்ல முற்பட்டால், இங்குள்ள புலிகள் ஆதரவு தலைவர்கள் குடி




மூழ்கிவிட்டதுபோல் அலறியடித்துக்கொண்டு கொடி பிடித்துப் போராடப் போவதாக மிரட்டுகின்றனர். அரசியல் நிர்ப்பந்தங்களைக் காரணம் சொல்லாமல், பிரதமரும் வேறு காரணம் கூறி அப்பயணத்தை ரத்து செய்கிறார்!

இன்னொரு பக்கம், தமிழகத்தில் தினமும் ஒரு விடுதலைப் புலி கைது செய்யப்படுகிறார். ஆயுதக் கிடங்குகள், குவியல்கள் என்று அதிர்ச்சி தரும் கண்டுபிடிப்புகள் நிகழ்கின்றன. அகதிகள் முகாம்களில் தீவிரவாதிகள் ஊடுருவுகிறார்கள். தமிழ்நாட்டுத் தலைவர்கள் பலர் அளிக்கும் தார்மிக ஆதரவும் தமிழக முதல்வரின் மௌனமும்தான் விடுதலைப் புலிகளுக்கு தமிழகத்தில் ஊடுருவவும் நடமாடவும் துணிவைத் தருகின்றன.

போதும் போதாததற்கு, இலங்கை அரசுக்கும் புலிகளுக்கும் இடையேயான போர் நிறுத்த ஒப்பந்தமும் ரத்தாகிவிட்டது (ஒப்பந்தம் அமலில் இருந்தபோதே புலிகள் அதை மதிக்கவில்லை; அதனால் இலங்கை அரசும் அதை மீற நேரிட்டது). இப்போது இலங்கையில் போர்ச் சூழலே நிலவுகிறது. கரையோரக் கடல் பரப்பில் புலிகளின் நடமாட்டத்தைத் தடுக்க, இலங்கை அரசு கண்ணி வெடிகளைப் பதித்து வைத்துள்ளதாக அறிவித்து, தமிழக மீனவர்களை எச்சரித்திருக்கிறது! அந்த அபாய எல்லைக்குள் பிரவேசிக்காமல் தொழில் செய்வது நம் மீனவர்களுக்குச் சாத்தியமே அல்ல.

கண்ணி வெடிகளுக்குப் பலியாகும் கொடுமையும் கொரில்லா யுத்தமும் நாகரிக உலகில் எந்த தேசத்திலும் நிகழக்கூடாத கொடுமைகள். எந்த மக்களுக்கும் நேரக்கூடாத கொடூரங்கள்.

இலங்கைத் தமிழர்களின் துயர் தீரவும் இந்தியத் தமிழர்களைச் சூழ்ந்து வரும் அபாயம் அகலவும் பிரதமர் உடனடியாகச் செயல்பட வேண்டும்.

முதலில், புலிகள் ஆதரவு பேசும் தமிழகத் தலைவர்களை அழைத்து, அவர்களது விபரீதப் போக்கை மாற்றிக்கொள்ளச் செய்ய வேண்டும். இலங்கை அரசுடன் விவாதித்து, இலங்கைத் தமிழர்களின் உரிமைகளைப் பாதுகாக்கும் வகையிலான அரசியல் தீர்வுக்கு இந்தியா வற்புறுத்த வேண்டும். தமிழகத் தலைவர்கள் இதற்குத் துணை நின்று, புலிகளை வன்முறையிலிருந்து ஜனநாயகப் பாதைக்குத் திருப்பியாக வேண்டும். இல்லையேல், இந்திய-தமிழக மீனவர்கள் மடிவது மட்டுமல்ல; தமிழகத்திலும் அதையொட்டிய மாநிலங்களிலும் பயங்கரவாதம் பரவிப் பெருகுவது, விரைவிலேயே நாம் காணக்கூடிய கொடுமையாகிவிடும். ●

# கடல் மல்லை

அடுத்த முறை மகாபலிபுரம் செல்லும்போது அந்த ஊரின் சரியான தமிழ்ப் பெயரைத் தெரிந்து செல்லுங்கள். ஆழ்வார் பாடல்களில் அந்தத் தலத்துக்கு பல்லவ மன்னனின் பெயரை ஞாபகப்படுத்தும் 'கடல் மல்லை' என்றுதான் பெயர். இங்கேயுள்ள குடவரைக் கோயிலில் கடலலைகளுக்கு அருகே பள்ளிகொண்டிருக்கும் விஷ்ணுவை தரிசிக்கலாம்.

திருமங்கையாழ்வார் கடல் மல்லைத் தலத்தில் சயனித்திருக்கும் இறைவனை இருபது பாசுரங்களில் பாடியுள்ளார். அவர் காலத்தில் சமண மதக் கருத்துகள் தமிழ்நாட்டிலிருந்து விலகத் துவங்கியிருந்தன. இந்து மதத்தின் மேல் மறுகவனம் பிறந்த காலம். அதனால் சமணக் கருத்துகளை வலுவாக மறுக்கும் பாடல்கள் சிலவற்றை பிரபந்தத்தில் காண்கிறோம்.

திருமங்கை மன்னனின் இந்தப் பாசுரத்தைப் பாருங்கள் -

'பிச்சச் சிறுபீலிச் சமண் குண்டர்
முதலாயோர்,
விச்சைக்கு இறை என்னும்; அவ்
இறையைப் பணியாதே,
கச்சிக் கிடந்தவன் ஊர் கடல் மல்லைத்
தலசயனம்
நச்சித் தொழுவாரை நச்சு என் தன்
நல் நெஞ்சே'

(பிச்சச் சிறுபீலி - சிறிதான மயிலிறகு (அந்தக் காலத்தில், ஏன்... இப்போதுகூட சமணர்கள் மயிலிறகை வைத்துக்கொண்டு சுத்தம் செய்யும் அகிம்சாவாதிகள்), குண்டர் - தாழ்ந்தவர், விச்சை - வித்தை படிப்பு, நச்சுதல் - விரும்புதல்)

'மயிலிறகு சமணர் முதலான தாழ்ந்தவர்கள் சொல்லும் இறைவனைப் பணியாமல் கச்சியிலும் கடல் மல்லையிலும் சயனித்திருப்பவனை விரும்பித் தொழுபவர்களை விரும்பு என் மனமே' என்று பரிந்துரைக்கும் திருமங்கையாழ்வாரின் பாடல்களில் பரமேசுவரன், நதிவர்மன் போன்ற பல்லவ மன்னர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருப்பதால் அவர் எட்டாம் நூற்றாண்டுக்காரர் என்று சொல்ல முடிகிறது.

அந்த நூற்றாண்டுகளில் வாழ்ந்த தொண்டரடிப் பொடியாழ்வாரும் இதுபோல் புத்த சமண மதங்களின் ஆதிக்கத்தை வலுவாகச் சாடியிருக்கிறார். ''புலையறம் ஆகிநின்ற புத்தொடு சமணமெல்லாம் கலையறக்கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோ...''. 'ஒழுங்காகப் படித்தவர்கள் இந்த மதங்களை கண்டுகொள்ள மாட்டார்கள்' என்று அடித்துச் சொல்கிறார்.

பவுத்தமும் சமணமும் சைவ வைணவங்களுடன் முரண்பட்ட ஏழாம், எட்டாம் நூற்றாண்டு காலத்துக்குப் பின் இந்து மதக் கருத்துகள் வேர்விட்டு, மற்ற மதங்கள் அடிபட்டுப் போய்விட்டன. அந்தச் சரித்திரத்தின் சான்று இந்தப் பாடலில் கிடைக்கிறது.

(படிக்கலாம்)

# அதுதான் நியாயம்!

அப்பா நேர்மையானவர்; தவறு செய்பவர்கள் உடனடியாகத் தண்டிக்கப்பட வேண்டும் என்ற கருத்துடையவர். இதனால் அப்பா மீது மிகவும் மதிப்பு வைத்திருந்தேன். ஆனால் இந்த மதிப்பு, சற்று முன் அவர் வங்கியில் நடந்து கொண்ட விதத்தைப் பார்த்ததுமே அதல பாதாளத்துக்குச் சரிந்தது.

வங்கியில் பணம் எடுக்க வேண்டும் என்று அப்பா சொன்னதால், அவரை இன்று வங்கிக்கு அழைத்து வந்திருந்தேன். கவுன்ட்டரில் அப்பாவுக்கு முன்னால் ஓர் இளைஞன் ஐந்தாயிரம் ரூபாய்க்கான செக்கை நீட்டி பணத்துக்காகக் காத்திருந்தான். கேஷியர் பணியிலிருந்த பெண்மணி, பத்து ஐநூறு ரூபாய் நோட்டுகளைத் தன் அருகில் நின்றிருந்த சக தோழியுடன் பேசியபடியே நீட்டினாள். வாங்கியவன் ஓர் ஐநூறு ரூபாய் நோட்டைத் திருப்பிக் கொடுத்து, ''நூறு ரூபா நோட்டுகளாகக் கொடுங்க மேடம்'' என்றான்.

ஐநூறு ரூபாய் நோட்டை வாங்கியபடியே தன் தோழியுடன் பேச்சைத் தொடர்ந்தாள் கவுன்ட்டர் பெண்மணி. இளைஞன் சற்று நேரம் பொறுத்திருந்தான். ஆனால், பேச்சு முடிவதாய்க் காணோம்.

''மேடம், ப்ளீஸ்... நூறு ரூபாயா கொடுங்க...'' என்று நினைவுபடுத்தினான்.

''ம்... ம்...'' என்றபடி கேஷியர் பெண்மணி பேச்சிலேயே மும்முரமாயிருந்தாள்.

மீண்டும் அந்த இளைஞன், ''மேடம்'' என்றான் பொறுக்க முடியாமல்.

இளைஞனுக்குப் பின்னால் நின்ற அப்பாவின் முகம்கூட எரிச்சலைக் காட்டியது. அருகில் நின்ற எனக்கும் கோபம் பற்றிக்கொண்டு வந்தது. இப்போது பொறுமையை முற்றிலும் இழந்துவிட்டான் அந்த இளைஞன். கேஷியர் பெண்மணியின் பேட்ஜை ஒரு நொடி எரிச்சலுடன் பார்த்தான். பின் சத்தமாகக் கத்தினான். ''நித்யா மேடம்! ஹண்ட்ரட்ஸாக் கொடுங்க...''

அவன் பெயர் சொல்லி இரைந்ததும்தான் அப்பெண்மணி இவ்வுலகத்துக்கு வந்தாள். அவன் ஏற்கெனவே கொடுத்த செக்கைப் பார்த்தாள். பின் 'மளமள' வென்று ஐயாயிரம் ரூபாயை, நூறு ரூபாய் கரன்ஸிகளாக எண்ணிக் கொடுத்தாள்!

'ஐநூறு ரூபாய்க்கு சில்லறை கேட்டதற்கு இந்த லேடி ஐயாயிரம் ரூபாய் கொடுக்குதே' என்று நான் திகைத்தேன். அந்த இளைஞனும் ஒரு நொடி திகைத்து, உடனேயே சமாளித்துக்கொண்டு அந்த ஐயாயிரம் ரூபாய வாங்கிக்கொண்டு நகர்ந்தான். அப்பா அவனை நோட்டமிட்டபடியே தன் செக்கை நீட்டிப் பணம் பெற்றார். அடுத்த நொடியே தாம் ஒரு மிலிட்டரிக்காரர் என்பதை நிரூபித்தார்.

வேகமாய்ச் சென்று அந்த இளைஞனை வங்கி வாசலில் மடக்கினார். ''மிஸ்டர், நாலாயிரத்து ஐநூறு ரூபா அதிகமா வாங்கிட்டுப் போறீங்க...''

அவன் வெலவெலத்துவிட்டான். ''அ...அ... ஆமாம்.... ஸாரி...'' என்றபடி நாலாயிரத்து ஐநூறு ரூபாவை அப்பா கையில் திணித்துவிட்டு, தன் பைக்கில் ஏறிப் பறந்தான்.

அப்பாவை மெச்சியபடி நான் புன்னகையுடன் சோபாவில் அமர்ந்தேன். அப்பா வேறு செக்ஷன் சென்றார். பின் பாஸ் புத்தகத்தில் பதிவுகள் செய்து கொண்டார். சற்றைக்கெல்லாம் என்னருகே வந்து, ''வேலையெல்லாம் முடிஞ்

சது... வா போகலாம்'' என்றார்! எனக்குத் 'திக்'கென்றது. அப்பா மீதிருந்த மதிப்பு சர்ரென்று இறங்கியது.

'நம்ம அப்பாவா இப்படி? கேவலம் நாலாயிரத்து ஐநூறு ரூபாவுக்காக நிலை தவறிட்டாரே?' என்று மனம் வெட்கப்பட்டது. ஆனால், உள் மனம் ஆதங்கத்துடன் சிலிர்த்தெழுந்தது. 'விடக் கூடாது... அப்பா நேர்மையானவர்ங்கிற நிலையிலேருந்து கொஞ்சமும் இறங்க விடக்கூடாது. கேட்டுட வேண்டியது தான். இப்பவே கேட்டுட வேண்டியது தான்!'

தயங்கித் தயங்கி, பயந்து பயந்து, ''அப்பா, அந்த கேஷியர் மேடத்துக்கு நாலாயிரத்து ஐநூறு ரூபா நஷ்ட மாகுமே..'' என்று இழுத்தேன்.

''ஸோ வாட்?'' என்று சீறினார். ''அந்த லேடி தன்னோட கடமையைச் செய்யலை. வெட்டிப் பேச்சுப் பேசிக்கிட்டிருந்தா. அதுக்குத் தண்டனை அது!''

நான் விடவில்லை. ''தவறுக்குத் தண்டனைங்கறீங்க... சரி... ஆனா...''

''என்ன ஆனா...?'' என்று எகிறினார்.

நான் மென்று விழுங்கினேன். பின் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு ''அப்படின்னா அவன்கிட்டேயிருந்து வாங்கியிருக்கவே வேண்டியதில்லையே. போகட்டும்னு விட்டிருக்க வேண்டியதுதானே..?''

''நோ!'' என்று இரைந்தார். ''அவன் ஏமாத்துக்காரன்! அதான் அவன்கிட்டேருந்து ரூபாயைப் பிடுங்கினேன்!''

''சரிதான்...'' என்ற நான் மீண்டும் தயங்கியவாறு கேட்டேன். ''பணத்தை நாமளே வச்சிருக்கறது சரிங்களாப்பா...?''

அப்பா என்னை எரித்து விடுவதுபோல் பார்த்தார். பின் தம் சட்டைப் பையிலிருந்து ஒரு ரசீதை எடுத்துக் காட்டினார். ''பார், அந்த ரூபாயை நான் எடுத்துக்கிடலை. அதை தேசிய நிவாரண நிதியில சேர்த்துட்டேன்!''

எனக்கு 'அப்பாடா!' என்றிருந்தது. தொடர்ந்து பேசினார்...

''அதையும் என் பேர்ல கட்டலை. அந்த கேஷியர் பெண் நித்யா பேர்ல தான் கட்டினேன்! அதுதானே நியாயம்...?'' ●



13

**மீ**ரா திரைப்படம் ஹிந்தியிலும் தயாரிக்கப்பட்டு பெருவெற்றி அடைந்து சில காலம் சென்ற பின், பிரபல திரைப்படத் தயாரிப்பாளரும் டைரக்டருமான ஒருவர் சதாசிவத்தை அணுகினார். எம்.எஸ். அவர்களை கதாநாயகியாக வைத்து தாம் படம் எடுக்க விரும்புவதாகவும் அதற்கு சம்மதம் அளிப்பதுடன், 'கல்கி' கதை, வசனம் எழுத வேண்டும் என்றும் கோரிக்கை வைத்தார்.

சதாசிவம், நண்பர் 'கல்கி'யைக் கலந்தாலோசிக்க, அவரும் ஒப்புதலளித்து ஒரு திரைக்கதை எழுதினார். கையெழுத்துப் பிரதியில் சுமார் ஐம்பது அறுபது பக்கங்களுக்கு அது நீண்டது. அந்தக்கதை: அமரதாரா! ஸ்டோரி டிஸ்கஷன் நடந்து, எல்லோருக்கும் கதை ரொம்பப் பிடித்துப் போயிற்று. காட்சிகளை அமைத்து, வசனம் எழுத 'கல்கி' கால அவகாசம் கேட்டார்.

அப்போதுதான் அந்த புரொட்யூசர் ஒரு நிபந்தனை விதித்தார்: ''எம்.எஸ்., என் டைரக்ஷனில் முழுக்க முழுக்க நான் சொல்கிற படிதான் நடிக்க வேண்டும். படத் தயாரிப்பில் எந்த விதத்திலும் வேறு யாருடைய குறுக்கீடும் இருக்கக் கூடாது!''

**க**ல்கியும் சதாசிவமும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள்; ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டார்கள். ''யோசித்துச் சொல்கிறோம்'' என்றார் சதாசிவம். இருவரும் விடைபெற்றுக்கொண்டு வந்து விட்டார்கள்.

''இப்படி ஒரு நிபந்தனையை டங்கன் கூட (சகுந்தலை, மீரா திரைப்படங்களின் டைரக்டர். அமெரிக்க நாட்டவர். அந்நாளில் மிகப் பிரபலமான இயக்குனர்.) போட்டதில்லையே. நல்ல யோசனைகளை வரவேற்று ஏற்றுக்கொள்வாரே'' என்றார் கல்கி.

''இந்தத் திட்டத்தையே கைவிட்டு விடலாம் என்று தோன்றுகிறது'' என்றார் சதாசிவம். ''மீரா படத்தில் நடித்த பிறகு குஞ்சம்மா (எம்.எஸ்.) வேறு எந்த ஒரு படத்தில் நடித்தாலும் ஒரு மாற்று கம்மியாகத்தான் இருக்குமே தவிர, அதைவிட உன்னத நிலைக்கு உயர முடியாது.''

# மறுபிறவி



''ரொம்ப நல்ல முடிவு'' என்று ஆமோதித்தார் 'கல்கி'. 'தெய்வீக நிலைக்கு அவரை உயர்த்திய பிறகு, மறுபடி மானுட நிலைக்கு இறங்கிவரச் செய்யவே வேண்டாம்.'

**தி**ரு. சதாசிவம் தமது வாழ்நாளில் எடுத்த எத்தனையோ முடிவுகளில் மிகச் சிறந்த முடிவு இதுதான் என்பதை எம்.எஸ்.ஸின் தெய்வீக இசையில் இதயங்களைப் பறி கொடுத்த லட்சோப லட்சம்

ரசிகர்கள் ஒப்புக்கொள்வார்கள். எம்.எஸ். அவர்களையே மீராவாகவும் கலைவாணியாகவும் அவரது ரசிகர்கள் ஏற்கும் அளவுக்குப் பின் நாட்களில் அவர் மேலும் உயர்ந்தார். அந்த புரொட்யூசர் - டைரக்டர் ஓரளவு கர்வத்துடன் அப்படி ஒரு நிபந்தனை விதித்திராவிட்டால், இந்த மகத்தான முடிவுக்கு சதாசிவம் வந்திருக்கப் போவதில்லை என்பதை எண்ணிப் பார்க்க, தெய்வ சித்தம் என்பது எப்படியெல்லாம்



* இடது ஓரம் முரளி, வலது ஓரம் ஆத்மாவுடன் சதாசிவம்

# எடுத்த கல்கி

70 முதல் 7 வரை

இயங்குகிறது என்பதை உணரலாம்.

இந்தச் சம்பவத்தினால் இன்னுமொரு பெரிய நன்மையும் விளைந்தது. 'கல்கி' அவர்கள் தமது தொடர்கதைகள் எதற்கும் கதைச் சுருக்கமோ, அத்தியாயங்களைப் பகுப்பதோ ஏதும் செய்ததில்லை. திட்டமிடல் எல்லாம் அவருடைய மூளைக்குள்ளேதான்! நாலரை ஆண்டுகளுக்கு எழுதிய பொன்னியின் செல்வனுக்குக்கூட ஒரு சிறு குறிப்பும் அவர் எழுதியதில்லை. சதாசிவ பண்டாரத்தாரின் 'பிற்காலச் சோழர் சரித்திரம்' என்ற புத்தகத்தின் மார்ஜினில் சில சரித்திரக் குறிப்புகள் மட்டுமே எழுதியிருக்கிறார்.

ஆனால், 'அமரதாரா', திரைப்படத்துக்காக உருவான கதையாதலால், பிறகும் படித்துப் பார்க்க வசதியாக கதைச் சுருக்கம் எழுதினார். பின்னால் 'கல்கி' அவர்கள் 'அமரதாரா' தொடர்கதை எழுத ஆரம்பித்து ஒரு சில மாதங்களில் காலமாகிவிட, கதையைத் தொடர்ந்து எழுதி முடிப்பதற்கு அவரது மகள் ஆனந்திக்கு அந்தக் கதைச் சுருக்கம்தான் உதவியது. இல்லாமற் போனால் கல்கி வாசகர்களுக்கு 'கல்கி'யின் மறைவு தந்த வருத்தம் தவிர, 'அமரதாரா'வைத் தொடர்ந்து படிக்க முடியாது போயிற்றே என்ற ஏமாற்றமும் சேர்ந்திருக்கும்.

இந்நாளில் எந்த வாரப் பத்திரிகையை

எடுத்துப் பார்த்தாலும் வண்ணமயமாக அச்சாகி இருக்கும். இது இன்று சர்வ சகஜமாகிவிட்டது. இதைச் சாத்தியமாக்கும் வெப்-ஆஃப்செட் எனப்படும் அச்சு இயந்திரத்தை முதன் முதலில் தருவித்தது,



• வைத்தியநாதனுடன்...

கல்கி நிறுவனம்தான். ஒரு பக்கம் பத்திரிகைக் காகித 'ரீ'லை மாட்டிவிட்டால், ஒன்றன்பின் ஒன்றாக நாலு வண்ணங்கள் அச்சாகி, மறுபக்கத்தில் முப்பத்திரண்டு பக்கமாக மடிந்து வெளியே வந்து விழும். பல்லாயிரக்கணக்கான பிரதிகள் ஒரு மணி நேரத்தில் அச்சாகும்.

இத்தகைய ஓர் இயந்திரத்தை கல்கி நிறுவனம் 1960களிலேயே தருவித்தது. ஆனால், துரதிர்ஷ்டவசமாக நாலு வண்ணங்களை அச்சடிக்கும் நான்கு 'யூனிட்'களில் ஒன்று, கப்பலிலிருந்து இறக்கப்படும்போது 'கிரேன்' சரியாக இயங்காததால், கீழே விழுந்து பழுதாகிவிட்டது. 'இன்ஷ்யூர்' செய்திருந்ததால் அந்த 'யூனிட்'டுக்குப் பதில் வேறு 'யூனிட்' தயாரித்து அனுப்பிவிட்டது ஜெர்மானிய நிறுவனமான 'பாலிகிராஃப்.' பழுதுபட்ட 'யூனிட்' கல்கி அச்சகத்தில் ஒரு மூலையில் கேட்பாரற்றுக் கிடந்தது.

சில ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு வேலை நிறுத்தம் காரணமாக கல்கி காரியாலயம் மூடப்படும் நிலை உருவாயிற்று. ஊழியர்கள் எல்லோருக்கும் இழப்பீடுத் தொகையாக பெருமளவில் பணம் பட்டுவாடா செய்ய நேர்ந்தது. வங்கிக் கடன்கள் வேறு. எல்லாவற்றையும் சரிக்கட்ட கல்கி காரியாலய வளாகத்தையே விற்றுவிடவும் தீர்மானிக்கப்பட்டது. மகரிஷி மகேஷ் யோகி வாங்கிக் கொண்டார். இயந்திரங்கள் எல்லாம் வேறு நபர்களுக்கு விற்கப்பட்டுவிட்டன. பாக்கி இருந்த ஓரிரு கருவிகளுடன் உடைந்து போன 'பாலி கிராஃப் யூனிட்'டும் நியூட்டோன் ஸ்டுடியோவில் வாடகைக்கு எடுக்கப்பட்ட ஒரு கொட்டகையில் கிடந்தது.

ஓராண்டுக்குப்பின் கல்கி புனர் ஜென்மம் எடுத்தபோது திரு. வைத்தியநாதன், திரு. ஆத்மநாதன், திரு.முரளி ஆகியோரிடம் நிர்வாகப் பொறுப்பையும், என்னிடம் ஆசிரியர் பொறுப்பையும் கொடுத்துவிட்டு திரு. சதாசிவம் ஓய்வு பெற்றார். அச்சிட இயந்திரம் ஏதுமில்லை. புதிதாக வாங்கப் பணம் இல்லை. நிறுவனத்தின் பொருளாதாரம் இருந்த நிலையில் வங்கிக் கடனும் கிடைக்காது. வேறு அச்சகத்தில் கொடுத்து அச்சிடலாம் என்றால், கல்கி பத்திரிகையின் தனிப்பட்டதொரு வடிவம் (சைஸ்) அதற்கு இடம் தரவில்லை! என்ன செய்வது?

உடைந்து போய், பல ஆண்டுகளாக யாராலும் கவனிக்கப்படாமல் மூலையில் முடங்கிக் கிடந்ததே ஓர் அச்சு யூனிட், அதுதான் கை கொடுத்தது! அதை உள்ளூர் மெக்கானிக்குகளின் ஆற்றலைப் பயன்படுத்திச் செப்பனிட்டோம். Reel unwinder ஒன்றையும் இங்கேயே தயாரித்து இணைத்தோம். திரு.முரளி, திரு.ஆத்மா ஆகியோரின் முயற்சியும் திரு.வைத்தியநாதனின் வழிகாட்டலும் உள்ளூர் மெக்கானிக்குகளின்

திறமையும் கைகோத்துக்கொண்டபோது, அச்சு இயந்திரம் உருவாகிவிட்டது.

ஒரே ஒரு 'யூனிட்'தான்; கறுப்பு வெள்ளை மட்டும்தான்; வண்ணங்கள் இல்லைதான். ஆனாலும் என்ன? கல்கி மறுபிறவி எடுத்துவிட்டது. ஏஜெண்டு கள் ஒத்துழைத்தார்கள்; வாசகர்கள் வரவேற்றார்கள்.

படிப்படியாக நிறுவனம் மறுபடி வளர்ச்சி அடைந்து, சொந்தக் கட்டடத்துக்குக் குடிபெயர்ந்து, புதிய, பெரிய இயந்திரங்களைத் தருவித்து - நிறுவி, இன்று கல்கி மட்டுமின்றி கோகுலம், GOKULAM, மங்கையர் மலர் ஆகிய எல்லாப் பத்திரிகைகளும் வண்ணமயமாக விளங்கி, உங்கள் கரங்களை அலங்கரிக்கின்றன.

ஆனால், இந்த மறு பிறப்புக்கும் முன்னேற்றத்துக்கும் அடிக்கல் நாட்டியது, கிரேனிலிருந்து நழுவி விழுந்து பழுதான ஓர் அச்சு இயந்திர 'யூனிட்'தானே!

அவ்வாறு விழ வைத்து, பின்னால் நடக்கப்போவதையெல்லாம் அறிந்திருந்த

■ சொந்தக் கட்டடத்தில் பூஜை..

இறைவனின் திருஉள்ளம் காட்டிய கருணையே அல்லவா!

(பேசுவோம்)



# என் குடும்ப ரகசியம்!

'பொறந்தா வீடா? புகுந்த வீடா?' - பதினைந்து வருடங்களுக்கு முன்பு வெளியான திரைப்படம். இப்போது அதே பெயரில், அதே இயக்குநரின் இயக்கத்தில், அதே கதாநாயகி நடிக்கும் தொடர், சன் டி.வி.யில் மற்ற தொடர்களுடன் ரேஸில் உள்ளது.

''கவர்ச்சிக் கதாநாயகியா சினிமாவுல நடிச்சுக்கிட்டிருந்த சமயத்துல டைரக்டர் வி.சேகர், தைரியமா என்னை குடும்பப் பாங்கான கேரக்டர்ல நடிக்க வெச்சார். அந்தப் படம், பெண்கள் மத்தியில் எனக்கு நல்ல பெயரை வாங்கிக் கொடுத்தது. இப்ப இந்த சீரியல் மூலமா தாய்க் குலங்களைத் தினமும் வீட்டுக்கே போய்ச் சந்திக்கிறேன்'' என்று பெருமையுடன் கூறுகிறார் பானுப்ரியா.

இன்னொரு பக்கம் 'பொல்லாதவன்' படத்தில் இயல்பான அம்மாவாக நடித்து, அங்கும் தனக்கென நிரந்தரமாக ஒரு இருக்கையை 'ரிசர்வ்' செய்து வைத்துள்ளார். இவற்றைத் தாண்டி வேறு ஏதாவது இருக்கா?

''நடிப்புக்கு இணையாக எனக்குப் பிடித்த மற்றொரு விஷயம் நாட்டியம். எஸ்.பி.ஆனந்தன், வெம்பட்டி சின்ன சத்யம் போன்றவர்களிடம் சின்ன வயசுல குச்சுப்புடி கத்துக்கிட்டேன். அப்புறம் கலாக்ஷேத்ரா சி.வி.சந்திரசேகர்கிட்டே பரதம். இப்ப பத்மா சுப்ரமணியத்திடம் பல்வேறு நாட்டிய நுணுக்கங்களைக் கத்துக்கறேன். 'பான்யன்' அமைப்பு நடத்தும் ஆதரவற்ற குழந்தைகளுக்கான நிகழ்ச்சிகளில் நாட்டியம் ஆடுறேன்'' என்று அடுக்கிக்கொண்டே போகும் பானுப்ரியா சந்தோஷப்படும் இன்னொரு விஷயமும் உண்டு.

''கல்லூரி மற்றும் பல்வேறு கலை நிகழ்ச்சிகளில் பலர் என்னோட குரலை மிமிக்ரி செய்றாங்க. பொதுவா நடிகர்களின் குரல்களைத்தான் மிமிக்ரி பண்ணுவாங்க. நடிகைகள் குரல் ரொம்ப அபூர்வம். அதுல ஒண்ணா, என்னோட குரல் இருக்கறது சந்தோஷம்'' என்கிறார் குழந்தையின் குதூகலத்துடன்.

''குடும்பத்தைப் பற்றிச் சொல்லுங்களேன்'' என்றதும், ''இதுல என்ன ரகசியம்! கணவர் ஆதர்ஷ் கௌசல், 'கிரியேட்டிவ் டிஃப்ரன்ஸ்' நிறுவனத்துக்குப் படங்கள் எடுக்கறார். இது, நேஷனல் ஜியாகரஃபி, டிஸ்கவரி போன்ற சேனல்களுக்கு டாக்குமெண்ட்ரி படங்களைத் தயாரிக்கும் நிறுவனம். பையன் ஸ்கூல் படிக்கிறான். குடும்பத்துக்குதான் அதிக நேரம் ஒதுக்கறேன். மிச்ச நேரத்துலதான் இப்ப சொன்ன நடிப்பு, நாட்டியம் எல்லாமே!'' என்கிறார் பானுப்ரியா.

– ராகவ்குமார்




அதிகாலைக் கடல் காற்று சில்லென்று வீசியது. இந்திரா மனதை வசீகரிக்கும் சக்தி கடலுக்கும் மழைக்கும் அதிகம் இருந்தது. மனதின் சஞ்சலங்கள் மறையும் வரை அலுக்காமல் கடலைப் பார்த்துக்கொண்டே இருப்பாள்.

கடந்த இரவில் இன்பன் அவளிடம் தன் காதலைச் சொல்லியிருந்தான். மிக அழகான தருணம் அது. 'யோசி இந்திரா... இதில் எந்தக் கட்டாயமும் இல்லை... நாம அதுக்கப்புறமும் நண்பர்களா இருக்கலாம்...' அந்த இரவு முழுக்க முழுக்க அவன் நினைவுகளால் நிரம்பி வழிந்தது.

இன்பன் நல்ல நண்பனாகத்தான் இருந்து கொண்டிருந்தான். ஆனால், நட்பையும் மீறி அவனிடம் ஒரு ப்ரியம், ஒரு காதல் இழையோடிக் கொண்டிருப்பதைப் பலமுறை அவள் உணர்ந்திருக்கிறாள்.

''குட்மார்னிங்டா... என்ன பலமான யோசனை...''

திடீரென்று இன்பன் குரல் மிக அருகாமையில் கேட்டது. பிரம்மையாக இருக்கும் என்று நினைத்தவளுக்கு அவள் முன் அமர்ந்தவனைப் பார்த்ததும் ஒரே ஆச்சரியம்.

''உன் மொபைலுக்குப் போட்டேன், ஸ்விட்ச் ஆஃப். வீட்டுக்குப் போட்டேன். உங்க அப்பாதான் சொன்னார், நீ இங்க வந்திருக்கேன்னு... என்னடா, உன்னை ரொம்பச் சங்கடப்படுத்திட்டேனா...?'' அவள் கைகளை எடுத்துத் தன் உள்ளங்கையில் வைத்துக்கொண்டு பரிவுடன் கேட்டான்.

அவளுக்குப் பிடித்திருந்தாலும், உள்ளுக்குள் ஒரு மனம் வேண்டாம் என்றது. மெல்ல அவனிடமிருந்து கைகளை விடுவித்துக் கொண்டாள். அவளின் காதல் செடியில் இன்பன் மிகத் தாமதமாகப் பூத்திருந்தான்.

''நான் கிளம்பறேன் இன்பா'' என்று எழுந்தாள். ஒரு பிரியத்தை எட்டி உதைத்து நாம் என்ன சாதிக்கப் போகிறோம்? தெரிந்தும் அவளால் நிற்க முடியவில்லை. வேக

# இந்திரா... இனியா... இன்பா..!

உமாஷக்தி

மாகச் சென்றுவிட்டாள். அவள் மனம் மட்டும் சுதாகரையே சுற்றிச் சுற்றி வந்தது.

'தெரு முழுக்க ஓடும் நானெழுதிய முத்தம், மழையில் நனையாதே இந்திரா' - எஸ்.எம்.எஸ்.ஸில் வந்த சுதாகர்தான் அவளை அன்று காலையில் எழுப்பினான். படித்ததும் சிலிர்த்துச் சிரித்தாள். இதுதான் சுதாகர். இப்படித்தான் அவளுள் நுழைந்த தும். ஓவியக் கல்லூரி மர நிழலில் எப் போதும் அமர்ந்துகொண்டு எதையாவது கிறுக்கிக்கொண்டு இருப்பான். கடக்கும்போ தெல்லாம் இவளைக் காதலுடன் பார்ப்பான். இவளுக்கு அவன் கிறுக்கலில்தான் கவனம். ஒரு நாள் அவனில்லாமல் அவன் வரைந்த படங்கள் மட்டும் அங்கிருக்க, குறுகுறுப்பில் ஓடிச்சென்று எடுத்துப் பார்த்துவிட்டாள். நாலைந்து கவிதைகளும் அவளது கண்களும் தான் அங்கே அவன் கண்டெடுத்தவை. ஆச்சர் யத்துடன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே சுதாகர் வந்துவிட்டான்.

''பிடிச்சிருக்கா உன் கண்கள்... சாரி, எனக்குச் சொந்தமான கண்கள்?''

இவள் புரியாது பார்க்க,

''என்ன முழிக்கற? எனக்குத்தான் நீ! நான் முடிவு பண்ணிட்டேன். நீயும் முடிவு பண்ணிச் சொல்லு. லவ் பண்ணலாம்'' என்றான். அவன் தைரியம் பிடித்திருந்தது இந்திராவுக்கு. என்றாலும் அப்போது அமைதியாகச் சென்றுவிட்டாள். இருவரும் ஒரே கல்லூரி என்பதால் அவன் காதலாகவும் இவள் நட்பாகவும் பேசிப் பழக ஏராளச் சந்தர்ப்பங்கள். ஒரு நாள் அவளை அடித்து வீழ்த்தியேவிட்டான் சுதாகர். இனியும் தன்னால் தோழி வேஷம் போட்டு நடிக்க முடியாதென்று எண்ணி அவளும் அவனிடம் சரணடைந்துவிட்டாள்.

ரொம்ப அன்பாகவும் அனுசரணையா கவும்தான் அந்தக் காதல் தொடர்ந்தது. அவள் அப்பா வித்யாதரன் டாக்டர். மகள்தான் அவருக்கு உலகம். அவள் விருப்பப்படிதான் ஓவியக் கல்லூரியில் படிக்க வைத்திருந்தார். ஒரு நாள் கூட்டிப்போய் அவனை அறிமுகப் படுத்தினாள். அவளுக்காக அவள் காதலை அங்கீகரித்தார். கல்லூரியின் கடைசி பரு வத்தில் இருந்தபோதுதான் அந்தச் சம்பவம் நடந்தது.

மழை நாள் வந்துவிட்டால் இந்தி ராவுக்கு மகிழ்ச்சிதான். அப்பா வீட்டில் இல்லை. லீவ் போட்டுவிட்டு ரொம்ப நேரம் மழையை ரசித்தாள். சுதாகர் கூட இருந்தால் இன்னும் ரசிக்கலாமே என்று தோன்ற, ஃபோன் போட்டு வரவழைத்தாள். அவள் அவனுக்காக காஃபி போடப்போவதற்குள் மழைக் காட்சியை அழகாய் வரைந்து வைத்திருந்தான். வந்து பார்த்து, பிரமித்து முத்தம் கொடுத்தாள். அதற்காகவே அடுத்து அடுத்தென்று என்னென்னவோ வரைய ஆரம்பித்தான். டி.வி.யில் யாவருக்கும் பிடித்த டைட்டானிக் திரைப்படம். கேட் வின்ஸ்லெட் அழகைச் சித்திரமாகத் தீட்டிக் கொண்டிருந்தான் டிகாப்ரியோ. காட்சியின் தீவிரத்தில் உறைந்த சுதாகர், மெல்ல இந்திராவிடம் திரும்பினான்.

''ஹேய், அப்படிப் பார்க்காதே'' என்றாள் இந்திரா.

''நானும் இப்படி வரையணும்னு ஆசையா இருக்குடீ.''

> **'அறுவடை'**
> **படத்துலதான்**
> **நானும் மம்முட்டி சாரும்**
> **நடிக்கிறோம். இந்தச் சிறுகதைல**
> **எனக்கு ஃப்ளாஷ்பேக்**
> **ரொம்ப பவர்ஃபுல்லா தெரியுது.**
> **இதே மாதிரிதான் 'அறுவடை'**
> **படமும் நல்ல கதையம்சத்தோடு**
> **பவர்ஃபுல்லா**
> **ரெடியாயிட்டு வர்றது.**

''நான் வேணா கேட் வின்ஸ்லெட்கிட்ட கேட்டுச் சொல்றேன்''

''யேய், என்ன கொழுப்பா? உன்னை வரையணும்டி''

''என்னப்பா பேசுற? சினிமாவுக்கும் நிஜ வாழ்க்கைக்கும் வித்தியாசம் இல்லையா?''

''சினிமாதானே இன்னைக்குப் பல பேரோட வாழ்க்கையத் தீர்மானிக்கிற சக்தியா இருக்கு?''

''அதுக்கு?''

''இப்ப, இந்த நிமிஷத்துல நம்மோட சந்தோஷத்துக்கும் அது அஸ்திவாரமா அமையறதுல என்ன தப்பு?''

''சுத்த பேத்தல்.''

''இல்லடி... உன்னை நான் இன்னைக்கு முழுசா வரையாம விடமாட்டேன்டி''

''யேய்... பீ சீரியஸ்பா. அதெல்லாம் சான்ஸே இல்ல. காஃபி குடிச்சியா, காதலா பார்த்தியா, ரெண்டு முத்தம் வாங்கினியா போய்க்கிட்டே இருக்கணும். கனவு காணக் கூடாது மை டியர்.''

''நான் காணுற கனவுகளே நனவாக்கத்தான்டி. பாரு இப்போ'' என்று எட்டி அவள் கைகளைப் பிடித்து விட்டான். விடுவித்துக்கொண்டு ஓடினாள். ஓடினாள்... வீடு முழுக்க ஓடிக்கொண்டே இருந்தாள். சளைக்காமல் துரத்தினான். ஆரம்பத்தில் விளையாட்டாகத் துரத்தினவன், அவள் ஆட்டம் காட்டத் தொடங்கியதும் வினையாகத் துரத்தினான். திடீரென்று அவன் மனதில் வன்மம் குடி புகுந்தது. அவளை எட்டிப் பிடித்தவன், அவள் கதறக் கதற முத்தமிட்டான். தட்டி விட்டாள். கன்னத்தில் பலமாக ஒரே அறை... எப்போது மயக்கமானாள், எப்போது எழுந்தாள் என்று தெரியவில்லை. அவள் தனது ஓவியத்தின் கடைசி நேரத்தில் இருந்தாள். அலறியவள், ஓடிச்சென்று போர்வையை எடுத்துப் போர்த்திக் கொண்டாள். கதறினாள்.

''ஏன்டா, இப்படிப் பண்ண?'' பாய்ந்து போய் அந்த ஓவியத்தைச் சுக்குநூறாகக் கிழித்துப்போட்டாள். ரசிப்பாள் என்று நினைத்தவனுக்குப் பலத்த அடி. அது அவன் உடம்பிலும் விழுந்தது. வீட்டையே ரணகளப்படுத்தினாள். அவ்வளவுதான்... அவனும் கலவரமாகிவிட்டான். அவள் கன்னத்தில் மறுபடி பளார். புறப்பட்டுவிட்டான்.

**அ**தன் பின் வந்த நாட்கள் வலி நிறைந்தவை. இந்திரா தன் காலையே சுற்றி வருவாள், கல்யாணம் பண்ணிக்கோ என்று கெஞ்சுவாள் என்று நினைத்துக் கொண்டிருந்தவனுக்கு அவளுடைய கோபமும் புறக்கணிப்பும் எரிச்சலைத் தந்தன. அவனுக்கும் தனக்கும் இருக்கும் உறவைக் கொச்சைப்படுத்தி, கல்லூரிச் சுவர்களில் ஓவியம் வரைந்து வைத்தான். அவளைக் கடக்கையில் விஷமமாகச் சிரிப்பான். அவளை எப்படியெல்லாம் காயப்படுத்த முடியுமோ அதையெல்லாம் செய்தான். அவனுடைய வக்ர புத்தியைப் பற்றித் தாமதமாகத் தெரிந்துகொண்ட இந்திரா, உடைந்து போனாள்.

அந்தக் காலகட்டத்தில் அவளைக் காப்பாற்றியது ஓவியங்கள், புத்தகங்கள், இசை, நண்பர்கள். பலவிதமான ஓவியங்களை வரைந்து அவள் மனதை இசை திருப்பினாள். மனதை ஒருமுகப்படுத்த யோகா வகுப்புகளுக்குப் போனாள். ஒருவாறு மனது சமன் பட்டது. படிப்பை முடித்த கையோடு ஃபிரான்ஸ் சென்றாள். அங்கு ஒரு வருடப் படிப்பு. இடையில் பாரிஸ், லண்டன், பெர்லின் போய் வந்தாள். ஓவியத்தில் பல நுணுக்கங்களைக் கற்றுக்கொண்டாள்.

கல்யாணத்தைப் பற்றி அப்பா கேட்கும்போதெல்லாம் ஏதாவது சொல்லி தட்டிக் கழித்தவள், ஒரு நாள் அவரிடம் தனக்கு நடந்ததை அழுதபடி சொன்னாள். அவர் அவளை ஆறுதல்படுத்தி, 'வாழ்க்கை ரொம்பப் பெரியது, இது கடந்துவிட்ட மேகம்' என்று

உணர்த்தினார். அவளுக்கென்று ஓர் ஓவியக் கூடத்தை உரு வாக்கித் தந்தார். 'இந்திரா ஆர்ட் கேலரி' இன்று சென்னை ஓவிய ரசிகர்களின் தலைமைச் செயல கம் என்கிற அளவுக்குப் புகழ் பெற்றது. டெடிகேட் ஆர்ட்டிஸ் டாக அவள் உருவாகியிருந்தாள்.

அவள் வாழ்க்கை வண் ணங்களாய் ஜொலித் தது. ஓவியப் போட்டி, கண்காட்சி என்று எப் போதும் பிஸியாக இருப்பாள். கண்காட்சியில் அறிமுகமான வன்தான் இன்பன். வெகு நாட் களுக்குப் பிறகு மயில் இறகாய் மனதை வருடும் நேசம் இப் போது இன்பன் மூலமாக. ஏற்றுக் கொள்ளவும் முடியாமல், விட்டு விடவும் இயலாமல் தவித்துக் கொண்டிருந்தாள் இந்திரா.

**ம**றுநாள். காலைக் கடற் கரை. இன்பன் காத்துக்கொண்டி ருந்தான். தூரத்தில் இந்திரா, இனியாவைத் தூக்கிக்கொண்டு வருவது தெரிந்தது. குட்டி ஏஞ்சல் மாதிரி இருந்தது இனியா. எழுந்து அவர்கள் அருகில் சென்று... ''அடடே, என் தங்கம் எப்படி இருக்கு...? என்கிட்ட வா'' என்றான்.

''அவளுக்கு மூடு சரி யில்லை'' என்றாள் இந்திரா.

''என் செல்லக் குட்டிக்கு யார் மேல கோபம்... ஏன் உம்முன்னு இருக்கீங்க... இனியா தங்கப் பாப்பாவாச்சே...'' அவன் அவளை வாரி எடுத்து முத்தமிட் டான். குழந்தை சகஜமாகிச் சிரித் தது. இப்போது அவளைப் பார்த்தான்.

சலனமே இல்லாமல் சொன் னாள், ''இன்பா, ரொம்ப யோசிக்கட்டேன்பா. இது சரியா வராது. என் வாழ்க்கையை அர்த்தப்படுத்த இனியா இருக்கா. இது போதும். காதல், கல்யாணம்ங்கற விஷயங்கள்ல நம்பிக்கை செத்துப் போய் நிறைய வருஷங்கள் ஆகுது. உன் எதிர்பார்ப்புகளுக்கு நான் சரியா வரமாட்டேன். நல்ல பொண்ணாப் பார்த்து கட்டிக்கோ...'' சொல்லும்போது அவள் குரல் நடுங்கியது.

இன்பன் அவள் தோளைத் தொட்டான், ''இந்திரா, உன்னோட கடந்த காலத்தையெல்லாம் தூக்கிக் குப்பைல எறிஞ்சிட்டு, தெளிவா நீ இந்த வெற்றியை அடைஞ்சிருக்கே... உன்னோட தன்னம்பிக்கை, அன்பு, பொறுமை இதெல்லாம் என்னை உன் பக்கம் ஈர்த்துடுச்சு. எவ்வளவு புத்தகம் வாசிக்கறே, எத்தனை மனுஷங்களைச் சந்திக்கறே. மனசுக்குள்ள மட்டும் ஒரு தீவா இருக் கேடா. உன்னை இன்னும் வெளிக்கொண்டு வரணும். உன்னோட ஒவ்வொரு வெற்றிக்குப் பின்னா லயும் நான் இருக் கணும்னு ஆசைப்பட றேன்டா. என்னை நீ மறுக்க உனக்கான நியாயங்கள் எனக் குப் புரியுது. ஆனா, ஒரு பத்து வருஷம் கழிச்சு நீ யோசிச் சுப் பார்த்தா, கொஞ்சம் வெறுமையா உணரலாம். உன் கைல இருக்கிற இனியா யாரு...? யார் பெத்த குழந்தையோ! அதுக் குத் தாயா, தோழியா நீ இருந்து பாத்துக்கறபோது உன் துணைக்கு நானும் வரணும்னு ஆசைப்படறது தப்பா?'' அவன் தன் ப்ரியத்தையெல்லாம் வார்த்தை களாக மாற்றி கொட்டித் தீர்த்தான்.



அதற்கு மேல் அவளால் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. அவன் கண்களைப் பார்த்தாள். அதில் அன்பும் காதலும் தேங்கிக்கிடந்தன.

''இன்பா, இன்னியோட கடைசிப்பா...''

''இந்திரா... நான் இவ்ளோ சொல்லியும்'' என்றான் இன்பன் உடைந்துபோய்.

அவனை ஆழமாகப் பார்த்து, அழகான ஒரு சிரிப்புடன் சொன்னாள்:

''நீ என் நண்பனா இருப்பது...''

ஜாலி ஸ்டோர்ஸ்

ஊரெங்கும் 'லட்ச ரூபாய் கார்' பற்றியே பேச்சு. இதைப் பார்த்த நம்ம ஊர் அரசியல் கட்சித் தலைவருக்கு திடீரென ஐடியா. தனது பி.ஏ.விடம் சொல்ல, அவர் உடனே 'ரத்தன் டாடா'வை செல்ஃபோனில் பிடிக்கிறார்.

''ஹலோ 'டாடாஜி' நமஸ்தே. நான்...''

''தமிழ்நாட்டுல இருந்து பேசறீங் களா?''

''ஆமா''

''ஒரு கட்சித் தலைவரோட பி.ஏ. தானே?''

''கரெக்ட்!''

''அடுத்த எலக்‌ஷன்ல இல வசமா வீட்டுக்கு ஒரு கார் கொடுக்கற ஐடியாவுல இருக்கீங் களா?''

''அட''

''அதுக்காக என்னோட லட்ச ரூபாய் காருக்கு அக்ரிமெண்ட் போட நினைக் கறீங்க?''

''ஐயோ! எப்படி 'ஜீ' இப்படி புட்டுப் புட்டு வைக்கறீங்க?''

''புட்டும் வைக்கலை. பணியாரமும் வைக்கலை. நீங்க ரொம்ப லேட். ஏற்கெனவே உங்க ஊர்ல இருந்து நாலு கட்சிங்க ஃபோன் பண்ணிப் பேசிட்டாங்க.''

''அடடா! எப்போ?''

''காரை அறிமுகம் செய்தேனே... அன்னிக்கு நைட்டே.''

''அடச்சே!''

''இன்னும் கேளுங்க. இந்த காரைத் தயாரிக்கணும்னு எனக்கு எப்போ தோணுச்சு தெரியுமா?''

''பேட்டியில படிச்சேன். நாலு வருஷத்துக்கு முன்னாடி மழை பெய்ஞ்ச ரோட்டுல நீங்க கார்ல போய்ட்டிருந்தீங்க. அப்போ டூ வீலர்ல ஒரு ஃபேமிலி போறதைப் பார்த்தீங்க. தவறி விழுந்தா என்ன

# ஆயிரம்

ஆகறதுன்னு வருத்தப்பட்டீங்க. அப்போ ஏழை மக்களுக்கு கார் தயாரிக்கற எண்ணம் வந்தது.''

''கரெக்ட்! அப்படி நான் நினைச்சு முடிச்ச மூணாவது நிமிஷம் ஒரு ஃபோன். உங்க ஊர் தலைவர் பேசினார். அடுத்த எலக்‌ஷன்ல அந்த காரை இலவசமா கொடுக்கறதாச் சொன்னார்.''

''ஆ! அப்போ அக்ரிமெண்ட் முடிஞ்சு போச்சா?''

''கவலைப்படாதீங்க. அதைவிட குறைஞ்ச விலையில ஹெலிகாப்டர் செய்து தரேன். நீங்க அதை இலவசமா கொடுங்க. காலை நீட்டிப் படுக்கக்கூட



இடம் இல்லாத ஜனங்க, காரைக் கொடுத்தா எங்கே 'பார்க்' பண்ணுவாங்க?''

''ஹெலிகாப்டரை 'பார்க்' பண்றதுக்கு மட்டும் இடம் வேண்டாமா?''

''அதுக்கு வேற ஐடியா இருக்கு. ஒரு பட்டனைத் தட்டினா இருபதடி உயரத்துல ஹெலிகாப்டர் அந்தரத்துல வேண்ட் ஆகற மாதிரி தயாரிக்கப்போறேன். ஒகே.வா?''

''தலைவர்கிட்டே ஒரு வார்த்தை கேட்டுட்டுச் சொல்றேன்''

''சீக்கிரம் சொல்லுங்க. என்னோட இன்னொரு செல்ஃபோன் ரொம்ப நேரமா அடிக்குது. நம்பரைப் பார்த்தா உங்க ஊருதான்னு தெரியுது. அப்புறம் அவங்களுக்கு ஹெலிகாப்டரைக் கொடுத்துடுவேன்.''

''அவசரப்படாதீங்க. லைன் லயே இருங்க. தலைவர்கிட்டே பேசிட்டு உடனே சொல்றேன்.''

''சீக்கிரம்! சீக்கிரம்!''

''சார், தலைவர் ஒ.கே. சொல்லிட்டார்! அந்த ஹெலி காப்டர் எவ்வளவு ஆகும்?''

''எழுபதாயிரத்துக்குத் தரேன்.''





# ரூபாய் ஏரோப்ளேன்!



''ஜீ! இப்ப உங்களுக்குப் பக்கத்துல யாருமில்லை தானே?''

''இல்லை. ஏன்?''

''எழுபதாயிரம்னு அக்ரிமெண்ட் போட்டுக்குவோம். ஆனா ஐம்பதாயிரத்துல தயாரிங்க. மிச்சம் இருபதுல பத்து உங் களுக்கு, பத்து எங்களுக்குன்னு பிரிச்சுப் போம்.''

''ஐம்பதாயிரத்துல எப்படி ஜீ தயாரிக் கறது?''

''ஒரு சக்கரத்தைக் குறைச்சுடுங்க. மேலே வேல்டா சுத்தற ஃபேனை சின்ன சைஸ்ல பண்ணிடுங்க. சீட்டுங்க உள்ளே பஞ்சுக்குப் பதிலா பழைய துணிகளை வெச்சுத் தச்சுடலாம். பட்டன்கள் சைஸை யும் சின்னதாக்கிடலாம். எப்படி ஐடியா?''

''அடேங்கப்பா! எல்லாரும் லட்ச ரூபாய் காரைத் தயாரிச்சுட்டேன்னு என்னைப் பாராட்டினப்ப கொஞ்சம் கர்வப்பட்டுட்டேன். ஆனா, உங்க ஊர் அரசியல்வாதிங்ககிட்டே பேசினதும் கர்வம் தூள் தூளாயிடுச்சு. நீங்க நினைச்சா ஆயிரம் ரூபாய்ல ஏரோப்ளேனே செய்வீங்க. உங்களை ஜெயிக்க என்னால முடியாது. ஆளை விடுங்க சாமி.'' ○

குசும்புராஜ்



# புள்ளிகள்... கோலங்கள்...

''ச்ரக்... ச்ரக்... ச்ரக்...''

பொன்ராஜ் நிதானித்தார். செவிகளைக் கூர் தீட்டிக்கொண்டார்.

'யாரோ நடக்கிறார்கள்' இங்கா... வெளியிலா... ஏதோ யோசனை தட்ட, திரும்பினார் - அறையின் ஓரத்தில் விழித்திருந்த டி.வி.யைப் பார்த்தார்.

இருட்டுச் சாலை. ஆள் அரவமற்று வெறிச்சோடி நீண்டிருந்தது. தலைக்குத் தொப்பியும், உடம்பில் மழை கோட்டும் அணிந்திருந்த ஒரு நெடிய உருவம் தனியாக நடந்து போய்க்கொண்டிருந்தது. ஈரச் சாலையில் பூட்ஸின் ஒத்தடம்தான் 'ச்ரக்... ச்ரக்... ச்ரக்...'. சற்று தூரத்தில் பங்களா ஒன்று இருந்தது. இருளில் மூழ்கியிருந்த அந்த பங்களாவின் ஒரு அறையில் மட்டும் மந்தமான வெளிச்சம் பரவியிருந்தது. அதை இலக்காக வைத்து அந்த உருவம் முன்னேறிக்கொண்டிருந்தது, கையில் அழுத்திப் பிடித்த கத்தியுடன்...

ச்ரக்... ச்ரக்... ச்ரக்...'

பொன்ராஜ் டி.வி.யிலிருந்து கண்களை விலக்கினார். வேறு சீரியல் அது. ஒலி குறைக்கப்பட்டிருந்தாலும், சுற்றுப்புற அமைதியில், சத்தம் நிஜம்போல் ஏமாற்றிவிட்டது. ரிமோட் எடுத்து, ஆஃப் பண்ணிவிட்டு நிமிர,

''அய்யா... கூப்பிட்டீங்களா...?'' என்று வேகமாக வந்து நின்றான் கந்தசாமி.

''எங்கே போய்ட்டே...?''

அவன் கைகால்கள் நனைந்திருப்பதைப் பார்த்து, ''சரி சரி.. நான் வெளியில் போய்ட்டு அரைமணியில திரும்பிடுவேன். நான் வந்ததும் நீ போகலாம்...'' என்றார்.

தலையாட்டிக்கொண்டான்.

''சப்போஸ்...'' நிறுத்தி, ''வரலேன்னா... நீ பூட்டிட்டுப் போ''

''இருக்கறேன் அய்யா...'' என்றான், கந்தசாமி.

பொன்ராஜ் அறையை ஒரு பார்வை பார்த்துவிட்டு வெளியில் வந்தார். காரை நோக்கி நடந்தார். டிரைவர் அவசரப் பணிவுடன் கார்க் கதவைத் திறக்க, அவனைத் தவிர்த்தார்.

''வீட்டுக்குப் போய்ட்டு நாளைக்கு வந்துடு.'' தானே காரை எடுத்தார்.

கார் அரை வட்டம் அடித்துச் சாலையில் கலந்ததும், மறைவில் பதுங்கியிருந்த அந்த பைக், தன் ஒற்றைக் கண்ணைத் திறந்தது...

குணசேகர், வீடு திரும்பினான்.

பைக்கை போர்டிகோ ஓரத்தில் நிறுத்தி சாவி உருவினான். 'டாபர்மேன்' தாவி வந்து, குழைந்தது. அதைத் தட்டிக் கொடுத்துவிட்டுப் படி ஏறினான். வாசல் கதவு லேசாகத் திறந்து, உள்ளிருந்து வெளிச்சம் ஒரு கோடுபோல் வாசலில் விழுந்து நீண்டு தூணில் உயர்ந்திருந்தது.

(தொடரும்)

# பிரிவோம் சந்திப்போம்

கூட்டுக் குடும்பத்தின் குதூகலத்தை செட்டிநாட்டுப் பின்னணியில் அலசியிருக்கும் படம். ஒரே பெண்ணான ஸ்நேகாவுக்குப் பெரிய குடும்பத்தில் வாழ்க்கைப்பட ஆசை. பெரிய குடும்பத்தின் பிள்ளையான சேரனுக்கு மனைவியுடன் தனிமையில் வாழ விருப்பம். இந்த இரு மனங்களும் ஒன்று சேரும்போது ஏற்படும் உணர்வுகளை நீட்டி முழக்கிச் சொல்லியிருக்கிறார்கள்.

காரைக்குடி குடும்பத்தைக் கண்முன் நிறுத்தி நம்மையும் அந்தக் குடும்பத்தின் உறுப்பினராக்கி விடுகிறார் இயக்குநர். உறவுகளின் சங்கமத்தில் தொடங்கி உணவு, கலாசாரம், வெள்ளை மனசு என்று திகட்டாத உணர்வுகளின் ஊர்வலமாக ஓர் இல்லத்தைப் பார்க்கையில் நெஞ்சம் தழுதழுத்துவிடுகிறது. இப்படிப்பட்ட ஓர் இடத்தில் வாழ முடியவில்லையே என்று மனநோயாளியாகவே ஆகிவிடும் ஸ்நேகாவின் கதாபாத்திரம் உயர்தரமானது. மேக்கப் இல்லாத அவரின் பாங்கான, பக்குவப்பட்ட நடிப்புக்கு ராயல் சல்யூட்.

பரியமான கணவன் எதிர்பார்க்கும் விஷயத்தை அப்படியே தந்திருக்கிறார் சேரன். பொருத்தமான தேர்வு. மாத்திரை சாப்பிட்டு மனைவி மருத்துவமனையில் இருக்கும்போது வெளிப்படும் துடிப்பில் ஆழம் அதிகம். கொஞ்ச நேரமே வந்தாலும் நவரச நடிப்பில் நெஞ்சம் நிறைகிறார் ஜெயராம். இன்னும் மௌலியில் ஆரம்பித்து கஞ்சா கருப்பு, மகாதேவன், இளவரசு, எம்.எஸ்.பாஸ்கர், லட்சுமணன், டி.கே.கலா என்று எல்லோருமே இயல்பின் இன்னொரு பக்கமாய் மிளிர்கின்றனர். 'எவ்வளவு நாளாயிற்று.. இந்த மாதிரி மனிதர்களைச் சந்தித்து' என்று ஏங்க வைத்துவிடுகிறது இந்த மனிதர்களின் சங்கமம்!

வித்யாசாகரின் இசையருவியில் நனைந்தே தீர வேண்டும். யுகபாரதியின் வரிகளில் 'கண்டேன் காதலை' கொண்டாடலாம். அட்டகட்டியை இதைவிட அழகாய் யார் காட்ட முடியும்? ஒளிப்பதிவாளர் எம்.எஸ்.பிரபுவுக்கு வாழ்த்துகள்.

அழகான கதை, ஆழமான நடிப்பு, உயர்வான இசை, பிரமிக்க வைக்கும் ஒளிப்பதிவு, நேர்த்தியான கலை இயக்கம் என்று எல்லாம் இருந்தும் படத்தில் இல்லாதது சுறுசுறுப்பு. முன்பாதி வரை தெளிந்த நீரோடை போல் திரைக்கதை அமைத்திருக்கும் கரு.பழனியப்பனின் இயக்கத்தில், இடைவேளைக்குப் பிறகு அங்கங்கே தொய்வு. ஸ்நேகாவுக்கான பிரச்னையை இடைவேளை முடிந்ததுமே சொல்லி, அடுத்தடுத்த முடிச்சுகளை அழகாக அவிழ்த்துச் சென்றிருந்தால் மறக்க முடியாத படமாக இருந்திருக்கும் பிரிவோம் சந்திப்போம்.

- அனாமிகா




# நல்லதும் கெட்டதும்!

ஆத்மா இல்லாமல் எந்த இயக்கமும் இல்லை. ஆனாலும், ஆத்மா எதனோடும் நேராகச் சம்பந்தப்படவில்லை. இதைத்தான் மாயை என்பது. எத்தனை யோசித்தாலும் இது புரிபடாது. எதிலும் சம்பந்தப்படாவிட்டாலும், சம்பந்தப்பட்டாற்போல மாயா விலாசத்தால் ஆத்மா இருந்துகொண்டுதான் இத்தனை கூத்தையும் நடத்துகிறது.

இதை ஏதோ கொஞ்சம் புரியவைப்பதற்காக ஓரிரு திருஷ்டாந்தம் சொல்வார்கள். அதாவது, சூரியன் இருப்பதால்தான் இத்தனை செடிகொடிகளும், விருட்சங்களும் வளர்ந்துகொண்டும், புஷ்பித்துக்கொண்டும், பழுத்துக்கொண்டும் இருப்பது. சூரியன் இல்லாவிட்டால், இது எதுவுமே நடக்காது. அதற்காக, சூரியனேதான் திட்டம் போட்டு இவற்றையெல்லாம் உண்டாக்கி நடத்துவதாகச் சொல்ல முடியுமா?

வெளிச்சம் இல்லாமல் ஒரே இருட்டாயிருந்தால் எந்தக் காரியமும் செய்ய முடிவதில்லை. விளக்கு ஏற்றி வைக்கிறோம். அதன் வெளிச்சத்தில் ஒருத்தன் புராணம் படிக்கிறான். இன்னொருத்தன் ஏதோ மனசைக் கெடுக்கும் புத்தகம் படிக்கிறான். வெளிச்சத்தின் துணையினால் பல பேர் பலவிதமான நல்லதும் கெட்டதுமான காரியங்களைச் செய்கிறார்கள். அதனால் இத்தனைக்கும் விளக்குதான் ஜவாப்தாரி என்று சொல்வதா? ஆனாலும், அந்த தீபம் இல்லாவிட்டால் இந்தக் காரியம் எதுவும் நடக்க முடியாது. இப்படித்தான் ஆத்மாவின் நேர் தூண்டுதல் அல்லது கர்த்ருத்வம் இல்லாமலே அதன் சாந்நித்ய விசேஷத்தால் மட்டும் மனசு வேலை செய்வதும், சரீரத்தை வேலை வாங்குவதும் என்று உபமானம் சொல்கிறார்கள்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# மாமியாரை சமாளிக்கணுமா?

**சுவைபட வாழ்தல் - மரபின் மைந்தன் முத்தையா, நேர் காணல்கள் : கல்யாணி பாபு, தாமோதரசாமி நாயுடு சாரிடபிள் டிரஸ்ட், 3, அன்ன பூர்ணா தோட்டம், வேடபட்டி, கோவை - 641 007**

அன்னபூர்ணா உணவகங்களின் நிறுவனர் கே.தாமோதரசாமியின் வாழ்க்கை வரலாறு. தன்னம்பிக்கை தரும் விதத்தில் எழுதப்பட்டுள்ள குறிப்புகள் படிக்கச் சுவைமிக்கதாகவும் திகழ்வது சிறப்பு. பிரச்னைகளை சமாளித்த விதம் யாவருக்குமான சமயோசித டிப்ஸ். வெற்றிப் படிகளில் ஏற விரும்புவோர் வாசிக்க வேண்டிய புத்தகம்.











**உங்கள் மாமியாரைச் சமாளிப்பது எப்படி? - தமிழ் சுஜாதா, கிழக்கு பதிப்பகம், 33/15, எல்டாம்ஸ் சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-18. விலை ரூ.70**

இன்றைய மெகா பிரச்னையான மாமியார்-மருமகள் சண்டைக்குத் தீர்வு காணும் ஒரு முயற்சியாக தமிழ் சுஜாதாவால் படைக்கப்பட்டிருக்கும் முன்யோசனை கட்டுரைகள். எங்கே பிரச்னை தோன்றுகிறது, தைரியமாக எதிர்கொள்வது எப்படி, சுமுகமாக அதனைத் தீர்ப்பது எவ்வாறு என்று பல விஷயங்களை ஆழ்ந்து சிந்தித்துக் கூறியுள்ளார். சினம் விட்டுப் படிக்கும் பட்சத்தில், மனசின் கனம் விட்டுப் போவது உறுதி.

**ஃபைவ் ஸ்டார் பலகாரக் கடை - கிரேஸி மோகன், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை-2. விலை ரூ.45**

கிரேஸி மோகனின் நகைச்சுவைக் கட்டுரைகள். குபீர் சிரிப்புக்கு உத்தரவாதம் தரும் எழுத்துக்கள் ரசிக்க வைக்கின்றன. வஞ்சனையின்றி வாரி வழங்கியுள்ளார். பாராவுக்கு பாரா சிரிப்பு வெடிகளைத் தூவிச் சென்று முத்தாய்ப்பாக முடிக்கும் விதம் அட்டா சக்கை அசத்தல்!

**தம்மபதம் - ஓஷோ, தமிழில்: டாக்டர் என்.ரமணி, கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.180**

ஓஷோவின் சொற்பொழிவுத் தொகுப்பு. புத்தரை ஒரு முகாந்திரமாகக்கொண்டு தமது சொந்த அனுபவங்களை விவரித்திருக்கிறார். பல குட்டிக் கதைகள் மூலம் கன்னத்தில் அறையும் உண்மைகள் வெளிப்படுகின்றன. தியானம், ஆசைகளை விட்டுவிடல், நேசித்தல் என்று தத்துவார்த்தரீதியாகப் பேசிவிட்டு, இறுதியில் நடனத்தோடு பாடி, மரணத்தை வரவேற்க உற்சாகப்படுத்துகிறார். சுவையான ஞானத் தேடல்!

– மித்ரா

## 16. ஆற்றங்கரையில்

குந்தவியின் முகத்தில் தோன்றிய மாறுதலை மகேந்திரன் கவனித்தான்.

''என்ன தங்காய்! என்ன?'' என்றான்.

தனித்து வந்த குதிரையை வெறித்து நோக்கியவண்ணம் இருந்தாள் குந்தவி. அவள் வாயிலிருந்து வார்த்தை ஒன்றும் வரவில்லை. இதைக் கவனித்த மகேந்திரன், ''தங்காய்! அதோ வருகிறது குதிரை தானே! புலி, சிங்கம் அல்லவே? எதற்காக இப்படிப் பயப்படுகிறாய்?'' என்று கேட்டான்.

குந்தவிக்கு ரோஷம் பிறந்தது; பேச்சும் வந்தது. ''புலி, சிங்கமாயிருந்தாலென்ன வந்திருக்க முடியாது.''

''செண்பகத் தீவின் இரத்தின வியாபாரிக்கு அப்பா தம் குதிரையைக் கொடுத்ததாகச் சொன்னார்.''

''ஓஹோ!''

இதற்குள் குதிரை மிகவும் நெருங்கி வந்துவிட்டது. மகேந்திரன் கட்டளைப்படி உடன் வந்த வீரர்களில் ஒருவன் குதிரையைப் பிடித்துக்கொண்டான். அதைத் தன்னருகில் வரும்படி குந்தவி கூறி, அதன் முதுகைத் தடவிக் கொடுத்தாள். குதிரை உடம்பைச் சிலிர்த்துக்கொண்டு கனைத்தது. பிறகு, அக்குதிரையையும் பிரயாண கோஷ்டியோடு கொண்டு போனார்கள்.

''அண்ணா! அந்த இரத்தின வியா

# பார்த்திபன் கனவு

அண்ணா - நீ பக்கத்திலே இருக்கும் போது!'' என்றாள்.

''பின் ஏன் இப்படி வெறித்துப் பார்க்கிறாய் பேய் பிசாசுகளைக் கண்டதைப் போல!''

''அண்ணா! அந்தக் குதிரை யாருடைய குதிரை தெரியுமா?''

''தெரியாது; யாருடையது?''

''அப்பாவினுடையது!''

''என்ன?''

''ஆமாம்; இதே மாதிரி உயர் ஜாதிக் குதிரைகள் இரண்டு அப்பாவிடம் இருக்கின்றன. இது புஷ்பகம்; இன்னொன்று பாரிஜாதம்.''

''அப்படியா? இது எப்படி இங்கே தறிகெட்டு வருகிறது? அப்பாவிடந்தான் நாம் காஞ்சியில் விடைபெற்றுக்கொண்டு கிளம்பினோமே? அவர் இந்தக் குதிரையில் பாரிக்கு என்ன நேர்ந்திருக்கும்?'' என்று குந்தவி மிக்க கவலையுடன் கேட்டாள்.

இரத்தின வியாபாரியை விக்கிரமன் என்பதாக குந்தவி சந்தேகிக்கிறாள் என்னும் விஷயம் மகேந்திரனுக்குத் தெரியாது. ஆகையால் அவன் அலட்சியமாக, ''பல்லவச் சக்கரவர்த்தியைச் சுமந்த குதிரை கேவலம் ஒரு வியாபாரியைச் சுமக்குமா? எங்கேயாவது கீழே தள்ளிக் குழியும் பறித்துவிட்டு வந்திருக்கும்!'' என்று கூறிச் சிரித்தான்.

குந்தவியின் உள்ளம் துடித்தது. ஆனால், ஒரு நிமிஷத்துக்கெல்லாம் ஓர் ஆறுதலான எண்ணமும் உண்டாயிற்று. உண்மையிலே இந்தக் குதிரை அவனைத் தள்ளிவிட்டு வந்திருக்குமானால், அவன் சோழ ராஜ குமாரனாக இருக்க மாட்டான். சாதாரண வர்த்தகனாய்த்தானிருப்பான். ஆனால்,

அந்த இரத்தின வியாபாரியின் தீரத்தைப் பற்றியும் போர்த் திறமையைப் பற்றியும் அப்பா ரொம்பச் சொன்னாரே? ஐயோ! அவனுக்கு என்ன நேர்ந்திருக்கும்? இவ்வளவு அறிவுள்ள பிராணியான குதிரைக்கு பகவான் பேசும் சக்தி மட்டும் கொடுக்காமல் போய் விட்டாரே? அந்தச் சக்தி இருந்தால், இரத்தின வியாபாரிக்கு என்ன நேர்ந்தது என்ற இரகசியத்தை அது வெளியிடுமல்லவா? புஷ்பகத்துக்குப் பேசும் சக்தி திடீரென்று ஓர் அற்புதத்தினால் வந்துவிடக் கூடாதா என்று ஆசைப்பட்டவளைப்போல் குந்தவி அதன் முதுகை அடிக்கடி தடவிக்கொண்டு வந்தாள்.

இப்படிப் பிரயாணம் நடந்துகொண்டிருக்கையில், கொஞ்ச நேரத்துக்குப் பிறகு சுற்றுப்புறக் காட்சியின் தோற்றத்தில் ஒரு மாறுதல் காணப்பட்டது. தரை ஈரமாயிருந்தது. அங்கங்கே பள்ளமான இடங்களில் நீர் தேங்கியிருந்தது. மரங்கள் பளிச்சென்று இருந்தன. காற்றும் குளிர்ந்து வந்தது.

''தங்காய்! நேற்று இங்கெல்லாம் பெருமழை பெய்திருக்கிறது - காஞ்சியில் ஒரு துளிகூட விழவில்லையே?'' என்றான் மகேந்திரன்.



அதைப் பற்றியேதான் குந்தவியும் சிந்தித்துக்கொண்டிருந்தாள். ஒருவாறு அவளுக்கு உண்மை புலப்பட ஆரம்பித்தது. நேற்று மாலை திடீரென்று இந்தப் பக்கத்தில் பெரும் புயலும் மழையும் அடித்திருக்கிறது. அதில் புஷ்பகமும் இரத்தின வியாபாரியும் அகப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். குதிரை எப்படியோ தப்பிப் பிழைத்து வந்திருக்கிறது. இரத்தின வியாபாரி - ஐயோ, பாவம்! அவனுக்கு என்ன நேர்ந்ததென்பது வழியில் எங்கேயாவது தெரிய வருமா? விபத்து நடந்த இடத்தை புஷ்பகம் காட்டுமா? ஒரு வேளை உயிர்போன அவனுடைய உடலைக் காணும்படியாக நேருமோ...? சிவசிவ...! அந்தச் சகிக்க முடியாத நினைப்பினால் குந்தவி கண்களை மூடிக் கொண்டாள்.

இவ்விதம் ஈரமான பிரதேசங்கள் வழியாக அரை காத தூரம் போன பிறகு, சூரியன் அஸ்தமிக்க ஒரு நாழிகைப் பொழுது இருக்கும் சமயத்தில் காட்டாற்றங்கரைக்கு வந்து சேர்ந்தார்கள். நேற்று மாலை அந்தக் காட்டாறு அளித்த காட்சிக்கு இப்போதைய காட்சி நேர்மாறாயிருந்தது. நேற்று அங்கே ஊழிக் காலத்து மகாப் பிரளயத்தைப் போல, கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே ஜலப் பிரவாகமாய், பிரம்மாண்டமான சுழல்களுடனும் 'ஹோ' என்ற பேரிரைச்சலுடன் அலைமோதிக்கொண்டு போன வெள்ளம் பார்க்கப் பீதிகரமான காட்சியை அளித்தது.

இன்று அதே பிரதேசம் பிரளயத்துக்குப் பிறகு ஏற்படும் புது உலக சிருஷ்டியின் நவமோகனக்கைப் பெற்றி

ருந்தது. காட்டாற்றின் மத்தியில் முழங்கா லளவு ஜலம் சலசலவென்ற சப்தத்துடன் போய்க்கொண்டிருந்தது. அஸ்தமன சூரியனின் பொற்கிரணங்கள் பகமரக் கிளைகளின் வழியாக வந்து ஓடும் ஜலத்தில் தவழ்ந்து விளையாடி வர்ண ஜாலங்களைக் காட்டின. நதிக்கரைப் பறவைகள் மதுரகானம் செய்துகொண்டு மரங்களில் உள்ள கூடுகளை நோக்கி வந்தன. அழகும் அமைதியும் ஆனந்தமும் அங்கே குடிகொண்டிருந்தன.

ஆனால், குந்தவியின் உள்ளத்திலோ நேற்று அங்கே அடித்த புயலும் மழையும் இப்போது குமுறிக்கொண்டிருந்தன. நேற்று அந்தக் காட்டாற்றில் பெருவெள்ளம் பெருகியிருக்க வேண்டுமென்று அவள் தெரிந்துகொண்டாள். நதிக்கரை மரங்களின் அடிமரத்தில் தண்ணீர்ப் பிரவாகத்தின் புது அடையாளம் நன்றாகப் பதிந்திருந்தது. தாழ்ந்த கிளைகளில் வெள்ளத்தில் வந்த வைக்கோல் முதலியவை சிக்கிக்கொண்டிருந்தன. காட்டாற்று வெள்ளமாதலால் மளமளவென்று பெருகியிருக்க வேண்டும். இரத்தின வியாபாரியின் கதியை ஒருவாறு குந்தவி இப்போது ஊகித்தாள். காட்டாற்று வெள்ளத்தின் சக்தியை அறியாமல் அவன் நதியில் இறங்கியிருப்பான். அல்லது அவன் இறங்கிய பிறகு பிரவாகம் திடீரென்று பெருகியிருக்கும். குதிரை எப்படியோ தப்பிக் கரையேறியிருக்கிறது. பாவம்! அது வெகுநேரம் கரையிலேயே இரத்தின வியாபாரியை எதிர்பார்த்துக் காத்திருந்திருக்கும். அவன் கரைக்கு வராமல் போகவே காஞ்சியை நோக்கிக் கிளம்பியிருக்கிறது. இரத்தின வியாபாரி - ஐயோ! பிரவாகத்துக்கு இரையாகியிருக்க வேண்டும். அடடா! தாயாரைப் பார்ப்பதற்காக அவசரமாக உறையூருக்குப் போவதாகச் சக்கரவர்த்தியிடம் சொன்னானாமே? அவனுக்கு இந்தக் கதியா நேர வேண்டும்...?

இப்படி குந்தவி எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில் பல்லக்கு நீரோட்டத்தின் அருகில் வந்தது. எல்லோரும் ஜலத்தில் இறங்கினார்கள். ஆனால், புஷ்பகம் மட்டும் நீரில் இறங்கத் தயங்கிற்று. நதிக் கரைக்கு வந்ததிலிருந்தே அதனுடைய தயக்கம் அதிகமாயிருந்ததை எல்லோரும் கவனித்தார்கள். அதைப் பிடித்து வந்த போர் வீரன், நீரோட்டத்தில் இறங்கும்படியாக அதைப் பலவந்தப் படுத்தினான். குதிரையும் இறங்கிற்று. அவ்வளவுதான்; உடனே, அது ஒரு திமிறு திமிறிக்கொண்டு போர் வீரனுடைய பிடியிலிருந்து விடுவித்துக்கொண்டது. வந்த கரையை நோக்கித் திரும்பி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஓடியது. கரையை அடைந்ததும் அது நிற்கவில்லை. வேகம் இன்னும் அதிகமாயிற்று. வில்லிலிருந்து கிளம்பிய இராமபாணம் என்பார்களே, அது மாதிரி நாலு கால் பாய்ச்சலில் பறந்து ஓடி, எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே காஞ்சி செல்லும் சாலையில் கண்ணுக்கெட்டாத தூரம் வரையில் சென்று மறைந்தது.

"புஷ்பகம் என்று அப்பா பெயர் வைத்தது சரிதான். தரையில் அதன் கால்கள் தொட்டதாகவே தெரியவில்லையே!" என்றான் மகேந்திரன்.



## 17. தீனக் குரல்

> **அடடா! தாயாரை பார்ப்பதற்காக அவசரமாக உறையூருக்குப் போவதாகச் சக்கரவர்த்தியிடம் சொன்னானாமே? அவனுக்கு இந்த கதியா நேர வேண்டும்...?**

***ரா***ஜ பிரயாணிகளும் பரிவாரங்களும் அந்தக் காட்டாற்றங்கரையில் உணவு அருந்தினார்கள். விதவிதமான பட்சணங்களும் பான வகைகளும் குந்தவி, மகேந்திரன் இவர்கள் முன் வைக்கப்பட்டன. மகேந்திரன் உற்சாகமாகச் சாப்பிட்டான். குந்தவிக்கு ஒன்றும் வேண்டியிருக்கவில்லை. உணவுப் பொருள்களை ஆற்றங்கரைக் காக்கைகளுக்கு வீசி எறிந்து அவை பறந்து வந்து கவ்விக்கொள்வதைப் பார்த்து மகிழ்ந்தாள். இந்த மகிழ்ச்சியும் வெளிப்படையானதுதான். மனத்திலே அந்தக் காட்டாற்று வெள்ளத்தில் மூழ்கி மாண்டு போன இரத்தின வியாபாரியின் நினைவு பெரிய பாரமாயிருந்தது. ஆம்; இறந்து போனவன் இரத்தின வியாபாரிதான், சோழ நாட்டு இராஜகுமாரன் அல்ல என்று குந்தவி ஒருவாறு முடிவு செய்துகொண்டிருந்தாள். தன் உள்ளத்தைக் கவர்ந்த சுகுமாரனுக்கு அத்தகைய கதி நேர்ந்தது என்ற எண்ணத்தை அவளால் சகிக்க முடியவில்லை; ஆகையால் அதில் நம்பிக்கையும் பிறக்கவில்லை.

உணவருந்திச் சற்று இளைப்பாறி விட்டு எல்லோரும் கிளம்பிக் கரையேறிய போது குந்தவிக்கு ஒரு நினைவு தோன்றியது. அகால மரணமடைந்தவர்களின் ஆவி அவர்கள் இறந்த இடத்திலேயே சுற்றிக் கொண்டிருக்கும் என்று சொல்வார்களே. அது உண்மையா? ஒருவேளை அந்த இளம் இரத்தின வியாபாரியின் ஆவியும் இந்த ஆற்றங்கரையிலேயே வட்டமிட்டுக் கொண்டிருக்குமா? நள்ளிரவில் இங்கே பயங்கரமாக அலறுமோ? இப்படி அவள் எண்ணியபோது, எங்கேயோ வெகு தொலை தூரத்திலிருந்து மிகவும் தீனமான ஒரு குரல் கேட்பது போலிருந்தது. அந்த மெலிந்த குரல், 'அம்மா! அம்மா!' என்பது போல் அவளுக்குத் தோன்றியது. குந்தவியின் தேகம் சிலிர்த்தது. அது தன்னுடைய சித்த பிரமையா அல்லது உண்மையில் இரத்தின வியாபாரியின் ஆவி அலறும் குரல்தானா? அண்ணாவிடம் கேட்கலாமென்று வாயெடுத்தாள். ஆனால், பேசுவதற்கு நா எழவில்லை.

இது என்ன அதிசயம்? பல்லக்கு மேலே போகப் போக, அந்தக் குரல் கெட்டியாகி வருகிறதே! இரத்தின வியாபாரியின் ஆவி தங்களைத் தொடர்ந்து வருகிறதா என்ன?

இன்னும் சற்று தூரம் போனதும், ''அம்மா! அம்மா!'' என்னும் அந்த அபயக் குரல் தெளிவாகக் கேட்கத் தொடங்கியது. அது நிஜமான மனிதக் குரலாகவே தொனித்தது.

ஒருவாறு குந்தவி சமாளித்துக் கொண்டு, ''அண்ணா! ஏதோ தீனக்குரல் கேட்பது போலிருக்கிறதே? உனக்குத் தெரிகிறதா?'' என்று கேட்டாள்.

''ஆமாம், தங்காய்! யாரோ 'அம்மா! அம்மா!' என்று அலறும் குரல் கேட்கிறது'' என்று மகேந்திரன் சொல்லி, குதிரை மேலிருந்தபடியே சுற்று முற்றும் பார்த்தான்.

''அதோ அந்த மண்டபத்திலிருந்து குரல் வருவது போலிருக்கிறது!''

ஆற்றங்கரையிலிருந்து கூப்பிடு தூரத்திலேதான் விக்கிரமன் தங்கிய மகேந்திர மண்டபம் இருந்தது. சாலையில் அந்த மண்டபம் இருக்குமிடம் நெருங்கியதும், குரல் அங்கிருந்துதான் வருகிறது என்று ஐயமறத் தெரிந்தது. குந்தவி பல்லக்கை அந்த மண்டபத்தருகே

கொண்டுபோகச் சொன்னான். ஏதோ ஒரு அதிசயத்தைக் காணப் போகிறோம் - பெரியதோர் இரகசியத்தைக் கண்டுபிடிக்கப் போகிறோம் - என்ற எண்ணத்தினால் அவனுடைய நெஞ்சம் திக்திக் என்று அடித்துக்கொண்டது.

மண்டபத்திலிருந்து வந்த குரல் விக்கிரமனுடையதுதான் என்று வாசகர்கள் ஊகித்திருப்பார்கள். அன்று காலையில் பொன்னன் ஆழ்ந்த தூக்கத்திலிருந்து கண் விழித்து எழுந்தபோது, தனக்கு முன்னமே விக்கிரமன் எழுந்து உட்கார்ந்திருப்பதைக் கண்டான்.

''பொன்னா! கிளம்பலாமா?'' என்று கேட்டான் விக்கிரமன்.

இருவரும் கலந்து யோசித்து, வெயிலுக்கு முன்னால் புறப்பட்டுச் சாலையோடு நடந்து போவது என்றும், வழியில் வண்டி கிடைத்தால் வைத்துக் கொள்வது என்றும் தீர்மானித்துக்கொண்டு கிளம்பினார்கள். ஆனால், கிளம்பி விக்கிரமன் சில அடி தூரம் நடப்பதற்கு முன்னமே அவன் தள்ளாடுவதை பொன்னன் கவனித்தான். 'மகாராஜா...' என்று அவன் ஏதோ கேட்க ஆரம்பிப்பதற்குள்ளே விக்கிரமன் தரையில் அப்படியே உட்கார்ந்துவிட்டான். பொன்னன் பரபரப்புடன் விரைந்து விக்கிரமனை அணுகி, ''ஐயோ! என்ன மகாராஜா? உடம்புக்கு என்ன?'' என்று கேட்டான்.

''தலையை அசாத்தியமாய் வலிக்கிறது பொன்னா! ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்போதும் பட் பட் என்று போடுகிறது. காலும் தடுமாறுகிறது. எனக்கு என்னமோ தெரியவில்லை!'' என்றான் விக்கிரமன்.

பொன்னன் அவனுடைய உடம்பைத் தொட்டுப் பார்த்துவிட்டு, ''ஐயோ! மகாராஜா! உடம்பு கொதிக்கிறதே! இராத்திரி




மகாராஜாவுக்கு
வைத்தியம்
செய்யாமல்,
தானும்
சாப்பிடாமல்
இருந்தால்
இரண்டு பேரும்
அங்கேயே மடிய
வேண்டியதுதான் !

நன்றாய்த் தூங்கினீர்களா?'' என்று கேட்டான்.

''இல்லை; என்னவெல்லாமோ ஞாபகங்கள்... சரியாகத் தூக்கம் வரவில்லை.''

''ஜுரம்தான் காரணம், மகாராஜா! பாவி நான் கும்பகர்ணனைப்போல் தூங்கினேன். என்னை எழுப்பியிருக்கக் கூடாதா? இந்த உடம்போடு உங்களால் ஒரு அடிகூட நடக்க முடியாது, வாருங்கள்!'' என்று சொல்லி விக்கிரமன் கையைப் பிடித்துத் தூக்கிவிட்டு, அணைத்துக்கொண்டபடியே மீண்டும் மண்டபத்துக்குள் கொண்டு சேர்த்தான்.

பிறகு, பொன்னன் நதிக்கரைப் பக்கம் ஓடிச் சென்று அங்கே சிந்திக் கிடந்த வைக்கோலையெல்லாம் திரட்டிக் கொண்டு வந்தான். வைக்கோலைப் பரப்பி அதன் மேல் விக்கிரமனைப் படுத்துக் கொள்ளச் செய்தான்.

மேலே என்ன செய்வது என்று இருவரும் யோசனை செய்தார்கள். சாலையோடு போகும் மாட்டு வண்டிக்காகக் காத்திருந்து, ஏதாவது ஒரு வண்டியை அமர்த்திக்கொண்டு அடுத்த ஊருக்குப் போவதென்றும், அங்கே வைத்தியம் பார்த்துக்கொண்டு கொஞ்சம் உடம்பு தேறியதும் கிளம்புவதென்றும் தீர்மானித்தார்கள். வேறு வழி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

'ஐயோ! இச்சமயம் வள்ளி இங்கே இல்லாமல் போனாளே? ஏதாவது மந்திர சக்தியினால் அவள் திடீரென்று இங்கே வந்துவிடக்கூடாதா?' என்று பொன்னன் அடிக்கடி எண்ணமிட்டான். ஜுரமாகக் கிடக்கும் விக்கிரமனுக்கு வேண்டிய சிசுருஷை செய்ய அவனுக்கு ஒன்றும் தெரியவில்லை.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் விக்கிரமன் 'தாகம்' 'தாகம்' என்று பறந்தான். அந்த மண்டபத்தின் பின்புறத்தில் பிரயாணிகள் சமையல் செய்துவிட்டு எறிந்திருந்த மண்சட்டிகள் சில கிடந்தன. அவற்றில் ஒரு சட்டியை பொன்னன் எடுத்துக்



கொண்டு போய் நதியிலிருந்து தண்ணீர் கொண்டுவந்தான். பொற்கிண்ணத்தில் தண்ணீர் அருந்த வேண்டிய மகாராஜா, இந்தப் பழைய மண் சட்டியில் குடிக்க வேண்டிய தாயிற்றே என்று பொருமினான்.

நேரமாகிக்கொண்டேயிருந்தது. ஜுரமும் அதிகமாகிக்கொண்டிருந்தது. பொன்னனுக்கு ஒரு பக்கம் பசி எடுத்தது. என்னது செய்வதென்று தெரியாமல் மனம் குழம்பிற்று. மகாராஜாவுக்கு வைத்தியம் செய்யாமல், தானும் சாப்பிடாமல் இருந்தால் இரண்டு பேரும் அங்கேயே மடிய வேண்டியதுதான். கடைசியாக ஒரு முடிவுக்கு வந்தான். பக்கத்திலுள்ள ஏதாவது ஓர் ஊருக்குப் போய் வைத்தியனையும் அழைத்துக்கொண்டு, ஒரு வண்டியையும் அமர்த்திக்கொண்டு வர வேண்டியது. அது வரையில் விக்கிரமனை சோழரின் குலதெய்வமான முருகக் கடவுள் தான் காப்பாற்ற வேண்டும்.

விக்கிரமனும் வேறு வழியில்லை யென்று இதற்குச் சம்மதிக்கவே, பொன்

ளன் மீண்டும் மீண்டும் மண்டபத்தைத் திரும்பிப் பார்த்துக்கொண்டு விரைவாக நடந்தான்.

பொன்னன் போன பிறகு விக்கிர மனுக்கு இன்னும் ஜுரம் அதிகமாயிற்று. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் நல்ல நினைவு தப்பிவிட்டது. மனதில் என்னவெல் லாமோ குழப்பமான எண்ணங்கள் குமுறின. வாய் என்னவெல்லாமோ சம் பந்தமில்லாத சொற்களைப் பிதற்றியது. அளவில்லாத வலியினால் உடம்பை முறித்துப் போட்டது. வரவர பலவீனம் அதிகமாயிற்று. கடைசியில் வாயிலிருந்து குமுறிய சொற்கள் வருவது நின்று, 'அம்மா! அம்மா!' என்று கதறல் மட்டும் ஈனமான குரலில் வரத் தொடங்கியது.

இப்படிப்பட்ட நிலைமையில்தான் குந்தவியின் பல்லக்கு அந்த மண்டபத்தின் வாசலில் வந்து நின்றது. குந்தவி அவசர மாகப் பல்லக்கிலிருந்து இறங்கி, மண்ட பத்தின் வாசற்படியில் வந்து நின்று, உள்ளே பார்த்தாள். ஆமாம்; இரத்தின வியாபாரிதான். அவனுடைய பால் வடியும் முகம் தாப ஜ்வரத்தினால் கோவைப் பழம்போல் சிவந்திருந்தது. விசாலமான கண்கள் ஒருகணம் மேல் நோக்கித் திருதிரு வென்று விழிப்பதும் மறுபடி மூடுவது மாயிருந்தன. ''அம்மா! அம்மா!'' என்று வாய் அரற்றியது.

இந்தக் காட்சியைக் கண்டதும் குந்தவி யின் உள்ளத்தில் உண்டான உணர்ச்சிப் புரட்சியை உள்ளபடி விவரிப்பது இயலாத காரியம். வியப்பு, மகிழ்ச்சி, துக்கம், இரக்கம் ஆகிய பல்வேறு மாறுபட்ட உணர்ச்சிகள் ஒன்றோடொன்று கலந்து போராடின. எல்லாவற்றுக்கும் மேலாகப் பரபரப்பு விஞ்சி நின்றது.

''அண்ணா! அண்ணா! இவன் இரத்தின வியாபாரிதான், அண்ணா! இவனுக்கு உடம்பு சரியில்லை போலிருக்கிறது. வைத்தியரைக் கூப்பிடு'' என்று கூச்சலிட்டாள்.

ராஜ பிரயாணிகளுடன் கூடப் பிரயா ணம் செய்த ராஜ வைத்தியர் வந்து பார்த்தார். ''கடுமையான விஷ ஜுரம்; உடனே சிகிச்சை செய்ய வேணும். குணமா வதற்குப் பத்து நாள் பிடிக்கும்'' என்றார்.

''பாவம்! இவனை நம்முடன் அழைத்துப் போகலாம் அண்ணா! செண்பகத் தீவைப் பற்றி இவனிடம் கேட்க வேண்டிய காரியமும் இருக்கிற தல்லவா?'' என்றாள் குந்தவி.

பிறகு காரியங்கள் வெகு துரிதமாக நடந்தன. இராஜ வைத்தியர் ஏதோ மருந்து எடுத்துக்கொண்டு வந்து விக்கிரமனுடைய நாவில் தடவினார். பின்னர் அவனைத் தூக்கிக்கொண்டு வந்து குந்தவியின் பல்லக்கில் போட்டார்கள். குந்தவி குதிரை மீது ஏறிக்கொண்டாள். மறுபடியும் பிரயா ணம் ஆரம்பமாயிற்று.

பொன்னன், போன இடத்தில் வெகு கஷ்டப்பட்டு ஒரு வைத்தியனைத் தேடிப் பிடித்தான். வண்டியும் அமர்த்திக்கொண்டு மகேந்திர மண்டபத்துக்கு வந்து, 'மகா ராஜாவுக்கு எப்படியிருக்கிறதோ?' என்று திக்திக்கென்று நெஞ்சு அடித்துக்கொள்ள உள்ளே வந்து பார்த்தபோது மண்டபம் சூனியமாயிருக்கக் கண்டான். அவன் தலையில் திடீரென்று இடி விழுந்தது போல் இருந்தது.

**(தொடரும்)**



27.1.2008 முதல் 2.2.2008 வரை

**மேஷம்:** ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். கல்வியில் முன்னேற்றம் உண்டாகும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். திருமணம் கைகூடும். உத்தியோக உயர்வு ஏற்படும். பண வசதி பெருகும். குழந்தைகள் வழியில் சந்தோஷம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் சீராகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். பரிகாரம் தேவை இல்லை.

**ரிஷபம்:** குழப்பம் தீரும். வேலையில் இடமாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் புதிய திருப்பம் உண்டாகும். பணக்கஷ்டம் குறையும். தாயின் உடல்நிலையில் கவனம் தேவை. குடும்ப வாழ்வில் விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. வாக்கு வன்மை மேலோங்கும். திருமணத் தடை விலகும். ராகு / கேது / குரு / சனி பகவானுக்கு அந்தந்த நாட்களில் தீபம் ஏற்றிவர, நன்மை உண்டாகும்.

**மிதுனம்:** திருமணக் காரியம் கைகூடும். மகான்களின் தரிசனம் கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். வேலையில் உயர்வு ஏற்படும். புதிய வேலைவாய்ப்பு வந்து சேரும். வழக்கு வெற்றி அளிக்கும். கல்வி வளம் மேலோங்கும். தந்தை வழிச் சொத்து வந்து சேரும். பரிகாரம் தேவை இல்லை.

**கடகம்:** முகம் தெரியாத நபர்களிடம் சகவாசம் வைத்துக்கொள்ளாதீர்கள். எதிலும் அகலக் கால் வைக்காதீர்கள். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. குடும்ப வாழ்வில் விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. அதிகமாகப் பேசுவதைத் தவிர்க்கவும். கல்வியில் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. எதிர்ப்பு, தொல்லைகள் அதிகம் இருக்கும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்து வர, நன்மை உண்டாகும்.

**சிம்மம்:** மனக் குழப்பம் தீரும். கல்வி வளம் மேலோங்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வேலையில் நற்பெயர் உண்டாகும். ஊதிய உயர்வு, இடமாற்றம் ஏற்படும். பிரிந்து வாழ்ந்து வந்த தம்பதிகள் ஒன்று சேர்வார்கள். வீடு / மனை வாங்க நல்ல தருணம். வழக்கு வெற்றி அளிக்கும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர, நன்மை கிட்டும்.

**கன்னி:** கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சுபச் செலவு ஏற்படும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். நண்பர், உறவினர் மூலம் அனுகூலம் உண்டாகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். தடை விலகி, திருமணம் கைகூடும். சொத்துக்கள் வாங்க நல்ல காலம். குரு / சனி வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கூட்டாளிகளை விட்டு விலக நேரிடும். கூட்டுக் குடித்தனத்தில் உள்ளவர்கள் தனிக்குடித்தனம் போகும் சூழ்நிலை ஏற்படும். பணக்

கஷ்டம் இருக்காது. கல்வி வளம் மேலோங்கும். உத்தியோகத்தில் நற்பெயர் உண்டாகும். ஊதிய உயர்வு ஏற்படும். திருமணக் காரியம் நிறைவேறும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். திருமணக் காரியம் கைகூடும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். சொத்துகள் வாங்க நல்ல காலம். கல்வி வளம் நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுபச்செலவு ரெடி. உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வியாபாரத்தில் நல்ல ஆதாயம் கிட்டும். ராகு / கேது / சனி வழிபாட செய்துவர, நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** பணக் கஷ்டம் இருக்காது. தெய்வ அனுகூலம் ஏற்படும். செலவுகள் சுபமானதாக இருக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். புத்திர பாக்கியம் உண்டாகும். சொத்துகள் வாங்க நல்ல தருணம். பிரார்த்தனைகள் நிறைவேறும். மனத்தில் உற்சாகம் மிகுந்து காணப்படும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குரு வழிபாடு செய்துவர, நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** கல்வியில் கவனம் தேவை. பணத் தேவை அதிகரிக்கும். குடும்ப வாழ்வில் விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. வாகனத்தில் செல்லும்போது உஷார். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. நண்பர்களால் தொல்லை இருக்கும். ராகு / கேது / குரு / சனி கிரகங்களுக்குத் தீபம் ஏற்றி வர, நன்மை உண்டாகும்.

**கும்பம்:** திருமணம் கைகூடும். வேலையில் நற்பெயர் ஏற்படும். ஊதிய உயர்வு, இடமாற்றம் ரெடி. கணவன், மனைவி விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. பணக் கஷ்டம் தீரும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். சொத்துகள் சேரும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். வழக்கு வெற்றி அளிக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சத்ரு தொல்லை நீங்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர, நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** புதிய முயற்சிகள் கைகூடும்.




வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். படிப்பில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உடல்நிலை சீராகும். ஊதிய உயர்வு கிட்டும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். ஆபரணப் பொருள் வாங்குவீர்கள். வியாபாரத்தில் நல்ல இலாபம் கிட்டும். வழக்கு வெற்றி பெறும். குரு வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

# குருட்டு வில்



**கா**ளியம்மன் கோயில்ல ராத்திரி வேடிக்கை, கரகாட்டம். தேனில இருந்து கூட்டியாந்திருந்தாங்க. குழல் ஊத மட்டும் தனியா திருநெல்வேலி அண்ணாமலையை அமர்த்தியிருக்காங்க. அவம் பாட்டுக்கு அம்புட்டுக் கிராக்கி. மேளச் செட்டு, ஊத்துமலை கிட்ணன் கோஷ்டி. பிறகு ஆட்டத்துக்குக் கேக்கணுமா?

ஆட்டக்காரில ஒருத்தி செவத்தையா, கொஞ்ச வயசக்காரியா இருந்தா. அவ வந்ததும் விசில் பறந்தது. மேளவட்டத்துக்குள் சேட்டைக்காரப் பயக குறுக்கு மறுக்க ஓடி, அவள உரசுனாங்க.

கொட்டுக்காரங்க மேளத்தைத் தட்டுனதும் ஆட்டக்காரி, ரங்கன கொட்டு, தவில், உறுமி, குழலு, சிங்கி அடிக்கிறவன், மைக் எல்லாத்தையும் தொட்டுக் கும்பிட்டுக்கிட்டு வந்தாள். கோமாளி பல்டியடித்தான். ஆட்டக்காரன் மைக் முன்னால போயி பாட்டை எடுத்து விட்டான்.

'ஏறுனது திருநவேலி - புள்ள
இறங்குனது மலையாங்குளம்
ஆடுனது காளியம்மன் கோயில் - நாங்க
அடங்குனது குழுக்குள்ள'ன்னு ஆட்டக்காரன் படிச்சதும், அதை அப்பிடியே வாசித்தான் அண்ணாமலை. தவில்காரன் 'திண்டு திண்டு'ன்னு வெளுக்க, ரங்கன கொட்டு 'ரண்டக்க ரண்டக்க'ன்னு அடிக்க, ஆட்டக்காரிகள் பம்பரமா கிறுகிறுன்னு சுத்துனாங்க. அப்பம்பாத்து ஒரு குடிமகன் உள்ள ஓடியாந்து உழுப்பினான். உடனே ஓட்டு மேல பேயும் மழை தெறிக்கும் போது சடசடன்னு சத்தம் குறையுற மாதிரி மேளம் நின்னது.

ஆட்டக்காரன் சும்மா இருக்காமல், 'இந்தக் குடியினால குடும்பம் அழிஞ்க

# செவக்காட்டுச் சித்திரங்கள் 13

வே. இராமசாமி

போகுது. இதை விடக் கூடாதா ராசாமாருகளே'ன்னு மைக்ல சொன்னான். உடனே பொம்பளைங்க உச்சுக்கொட்டி, 'நல்லா புத்தில உறைக்கிற மாதிரி ரெண்டு பாட்டைப் படியப்பா'ன்னு சொன்னாக. ஆட்டக்காரன் சந்தோசமா 'குடிகாரப் பாவி களே திருந்துங்களே... கோட்டி பிடிச்சு அலையுதேளே'ன்னு படிக்க, அவனுக்குச் சனியன் வந்திருச்சு. குடிகாரக் கோமகன்கள் லாம் ஒண்ணு சேந்து ஆட்டக்காரனைச் 'செவிட்டுக்குச் செவிடு' இழுத்துட்டாங்க. ''ஆட்டமும் வேண்டாம் கிட்டமும் வேண் டாம். ஊரைப் பாத்து ஓடுல''ன்னு விரட்டிட்டாங்க. முதல் நாள் திருவிழா இதனால 'பொக்'குனு போயிருச்சு.

மறுநாள் வில்லுப்பாட்டு நிகழ்ச்சின் னாங்க. இந்த ஆட்டம், திரைப்படம், வில்லடி இதுகளை புக் பண்ண நல்ல விவரந் தெரிஞ்ச ஆளுகதான் போவாங்க. அய்யனு மாமாதான் இந்த வருசம் வில்லடி தேடிக்கொண்டு வந்தாரு. போன வட்டம் நாலுவாசன்கோட்டை கணேசனைக் கூட்டியாந்தாரு. அவன் நாகக்கன்னி கதை படிச்சான். சும்மாவா படிச்சான்? கதை சொல்லும்போதே தலையில் உள்ளங் கையால் பாம்பு படமெடுக்கிற மாதிரி செஞ்சு, வளைஞ்சு வளைஞ்சு ஆடிப் படிச் சான். சனமெல்லாம் பயபக்தியா கேட்டது.

கதை முடியும்போது தலையில் அக்னிச் சட்டிய வச்சுக்கிட்டு கடைசிக் கட்டத்தைச் சொல்றது கணேசனாலதான் முடியும். வேற யாரும் பாட்டுப் படிக்க முடியாது. அப்போ விறுவிறுப்பா வில்லு அடியும் சிங்கியும் விழும். அதைக் கேட்டு சனத்துக்கு அருள் வந்து சாமி ஆடுவாங்க. சாமின்னா சும்மா இல்ல. விழுந்து பெறண்டு 'சந்நதம்' பயங் கரமா இருக்கும். சில சாமிகள் வில்லு மேடையில் முட்டி ஆங்காரமாய் ஆடின வில்லுக்காரன் மேலப் போயி மொந்து மொந்துன விழுந்து ஆடுனா, அவன் எப்படிப் படிப்பான்? நிப்பாட்டிட் டான். ''சாமியெல்லாம் அமந்தாத்தான் மேற்கொண்டு வில்லடிப்பேன்''னு போன்ல சொன்னான். அதுக்குப் பிறகு தான் 'கப்சிப்'னு அமைதியானாங்க.

**ஊ**ர்லருந்து ரோட்டு விலக்குவரை டீப்-லைட் கட்டியிருந்தாங்க. சாமியை ஜெகசோதியா சோடிச்சிருந்தாங்க. வில்லு மேடையில் வில்லக் கட்டுனாங்க. பின் பாட்டுப் படிக்கிற பொம்பளை வந்து உக்காந்ததும், அவ கழுத்துல கிடந்த கருகமணியை நகை போல மதிக்கப் பொம்பளைய பேசுனாக. சில்க் சட்டை, வேட்டி, பவுடர் பளபளக்க பத்து மணிக் கெல்லாம் வில்லுச் செட்டுல எல்லாரும் வந்து ஆஜராயிட்டாங்க. பாட்டுக்காரன் மட்டும் பாக்கி. முக்கியமான ஆளுன்னா லேட்டாத்தான வருவாங்க. இந்தத் திரு விழாவுக்கு கணேசன் கிடையாது. வேற யாரோ கோஷ்டியாம்.

மெயினான ஆளு ரொம்பச் சோக்கா மேடை ஏறுனாரு. கம்பம் பக்கத்துல உள்ள கிராமத்துக்காரராம். பின்னாடி அவரு மருமகனும் இருந்தான். முதல்ல பெரும் புள்ளிகளுக்கு வந்தனஞ் சொல்லி, 'மங்களம் நித்ய சுக மங்களம்'னு பாடி சும்மா வெளுவெளுன்னு வில்லடிச் சாங்க. பிறகு ஊரு வளத்தைச் சொன் னான். ''மிள காய்ப் பழங்கள் காயு றது சிவப்புக் குளம்போலத் தெரியுது. தவிச்ச வாய்க்குக் கேக்கும் முன்னாடி 'இந்தா'ன்னு தண்ணீ தருவாங்க. ஊரெல் லாம் வெளைஞ்ச தானியம் தெருத் தெருவாச் சிதறிக்கெடக்கு. கதிரடிக்கக் களமே பத்தலை''ன்னு ஊரை ஒரே தூக்காத் தூக்கிச் சிறப்புப் படிச்சான்.

அது முடிஞ்சதும், ''வல்லரக்கன் கதையா? நாகக்கன்னியா? பாரதமா? தசரத ராமன் கதையா, வள்ளியுந் தெய்

வானையுமா? எதைப் படிக்கணும்னு நீங்களே சொல்லுங்க சாமிகளே''ன்னு கூட்டத்தைப் பார்த்துக் கேட்டான். அப்பமே ரூவாய் குத்த, ஆளுக மேடை ஏறுதாங்க. குத்தாம இருக்கலாமா? ஊரைச் சுத்தி அடிச்ச பெருமையப் புகழ்ந்திருக்கான். பணங் குடுத்தவங்க பேரை வேறத் தனியா போன்ல குலம் கோத்திரந்தோட ராகம்போட்டு இழுத்திட்டிருக்கும்போது, சனம் 'வல்லரக்கன் கதையையே படியப்பா. தாலுவாசல்கோட்டை கணேசனைவிடப் பிரமாதமாப் படிக்கணும் பாத்துக்கோ'ன்னாங்க.

அவனும் கதையை எடுத்துவிட்டான். நடுவுல நடுவுல கண்ணை மினுக்கு மினுக்குன்னு அடிச்சான். எல்லாரும் துல 'வியங் வியங்'னு விசுதான். ரசிகப் பெருமக்களுக்குக் கோவம் கொதநாடியைப் பிச்சுக்கிட்டு வருது. 'நிறுத்துங்கல உங்க வேடிக்கையை. சாமி குத்தம் ஆயிரப் போவுது'ன்னு ஆளாளுக்குத் தகுந்தபடி வைதாங்க. வில்லுக் கோஷ்டியில் கண் தெரியாதவன், பின்பாட்டுப் பாடிய மருமகனைப் படிக்கச் சொல்ல, அவன், 'நீங்க படிங்க மாமனாரே'ன்னு சொல்ல, ஒரே சந்தக்காடாப் போச்சு. வில்லடியும் நின்னது. கருகமணி பின்பாட்டுக்காரிக்கும் வெறும் பின்பாட்டுதான் தெரியும்னான். சனங்களுக்கு எரிச்சல் அதிகமாகி, 'பொட்டணம் கிட்டணத்தைத் தூக்கிக்கிட்டுப் போய்ச் சேருங்கல'ன்னு இவங்களையும் முடுக்கிவிட்டுட்டாங்க. அய்யனு

ரீடர்ஸ் கார்னர்

## கவிதைத் தோழி!

மனத்தில் கலக்கம் ஏற்படும்போது நம் இஷ்ட தெய்வத்திடம் சென்று முறையிடுகிறோம். என் தோழி உமா, இதையே எளிமையான நான்கு வரிக் கவிதையாக எழுதி தங்கள் வீட்டு முருகன் காலடியில் வைத்துவிடுவாள். ஒரு முறை, ஆஞ்ஜியோப்ளாஸ்டிக்காக என் கணவர் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டபோது, உமா தன் வழக்கப்படி எண்ணங்களைக் கவிதையாக்கி முருகனுக்குச் சமர்ப்பித்தாள்.

'வண்டொன்று கமலத்து உண்டு மகிழ்ந்த
தேனைப் போல்
கொண்டு வந்த குரலை உடைய மூர்த்தி எனும்
பெயருடையான்
செண்டுபோல் சேர் அடைப்பதனைச் சீரடுத்திச்
செயல்படவே
கண்டுகொண்டு காத்திடுவாய்; காலமெல்லாம்
போற்றிடுவாய்'

**- சித்ரா மூர்த்தி, டெல்லி**



லைட்டுக்குக் கூகது போலன்னு நினைச்சாங்க. மேடைலருந்து மஞ்சள் லைட்டை (ஜிகினா போட்டது) அணைச்சாங்க. வில்லடிப்பவன் என்னன்னா, இன்னும் 'பக்கர பக்கர'னு முழிச்சுக்கிட்டு கதை நடத்துதான். தம்பியாபுள்ளைக்கு மாலைக் கண். அது தெரியாமல் கூட்டியாரலாமா அய்யனு மாமா? கோவை வில் நாணில் குத்துமதிப்பா அடிப்பான் போல. வில் முன்னால நகர்ந்தது பாராமல், வெறுங்காத் மாமாவுக்குன்னா ரொம்பச் சங்கடமாப் போனது. 'நம்ம சர்வீஸ்லயே இந்த மாதிரிக்கு நடந்ததில்லையே'ன்னு. வேற யாருக்கும்னா படக்குனு பட்டப்பேரு வச்சிருப்பாங்க. அய்யனு மாமா பெரிய மனுசராச்சே. அவருக்குப் பேரிட்டால் மரியாதையா இருக்காதில்லையா. அதனால அவரு மகளுக்கு 'குருட்டு வில் குருட்டு வில்'னு பட்டம் கட்டிட்டாங்க.

*(மண் வாசம் வீசும்)*



# கங்குலி

ஒரே நாளில் அடுத்த பத்தாண்டுகளுக்கான வேலையைச் செய்து முடித்திருக்கிறது பி.சி.சி.ஐ.

எண்ணிப் பார்க்கவே முடியவில்லை. கங்குலி, டிராவிட், கும்ப்ளே இல்லாத ஒரு நாள் அணியை ஒரு வருடத்துக்கு முன்னால் நம்மால் கனவிலும் நினைத்துப் பார்த்திருக்க முடியாது. கர்ணனின் கவச குண்டலம்போல கடந்த பத்தாண்டுகளாக இந்திய அணியோடு ரத்தமும் சதையுமாக இருந்தவர்கள் இவர்கள். காலச் சுழற்சியில் 20-20 அணியில் காண்பிக்கப்பட்ட இளரத்தங்கள்தான் இனி 50 ஓவர் அணியிலும் நீக்கமற நிறைந்திருக்கப் போகிறார்கள். இது கங்குலி, டிராவிடுக்கு இழைக்கப்பட்ட அநீதியா அல்லது பி.சி.சி.ஐ.யின் மாஸ்டர் ஸ்ட்ரோக்கா? இந்தக் கேள்விக்கான விடையை உடனே அறிந்துகொள்வதில் எல்லோருக்கும் ஆர்வம் உண்டு. மிக முக்கியமாக ஆஸ்திரேலியா டூரில் இத்தனை இளம் வீரர்களைக் களம் இறக்க வேண்டுமா என்கிற துணைக் கேள்வியும் எழுகிறது.

மேற்கு வங்கத்தில் மட்டும்தான் கங்குலியின் நீக்கத்துக்கு எதிர்ப்பு கிளம்பியிருக்கிறது. டோனிக்கு கங்குலியைப் பிடிக்கவில்லை என்று பெங்கால் கிரிக்கெட் அமைப்பு வெளிப்படையாகச் சொல்லியிருக்கிறது. அடுத்த தலைமுறை வீரர்களை நாங்கள் கண்டுபிடித்தாக வேண்டும் என்று பி.சி.சி.ஐ.யின் வியாக்யானம் அவர்களுக்குப் போதுமானதாக இல்லை. ஏதோ ஒரு பெரிய அழுக்கைத் தூய்மைப்படுத்திக் கொண்டதுபோல பி.சி.சி.ஐ. நடந்துகொள்கிறது. அதனுடைய அன்றாட வாழ்க்கையின் அனைத்து அம்சங்களிலும் அரசியல் இருப்பதாக அவர்கள் சந்தேகிக்கிறார்கள். வழக்கம்போல பவாரின் உருவ பொம்மையை எரிக்கிறார்கள். பழி ஓரிடம், பாவம் ஓரிடம்.

ஹேடன், கில்கிரிஸ்ட் அளவுக்கு கங்குலியால் அணிக்கு அதிக பங்களிப்பை வழங்க முடியவில்லை. கடந்த ஒரு வருடமாக முப்பது, நாற்பதுகளில் திருப்தி அடைந்துகொண்டார். ஆனால், மறுபக்கம் சென்ற வருடம் வெறிகொண்டு ஆடினார் டெண்டுல்கர். தொண்ணூறு அடிக்கும் வரை நடுக்கம் இல்லாமல் ஆடியது அவரை மேலும் மேதையாக்கியது. மறுபக்கம் எப்படியோ பி.சி.சி.ஐ.யின் அபிமானத்தைப் பெற்றுக்கொண்டார் ஷேவாக். ஆஸ்திரேலியாவில் அவர் நம்பிக்கையளிக்கும் விதமாக ஆடியது கங்குலிக்கு மேலும் சிக்கலை ஏற்படுத்தியது. ஆஸ்திரேலியா இந்தியா வந்தபோதே ஒரு மேட்சில் கங்குலியை நீக்கினார் டோனி. அப்போதே கங்குலியின் முன்னுணர்வு அலாரம் அடித்திருக்க வேண்டும். டிராவிட் பற்றிக் கேட்கவே வேண்டாம். அவர் மீதான உறுதி தளர்ந்துபோகத் தொடங்கிய முதல்நாளே அவரைத் தவிர்க்கத் தொடங்கிவிட்டார்கள். ஜாகீர்கான் இல்லை. ஸ்ரீசாந்த் இல்லை. என்ன கெட்டுவிட்டது? ஆர்.பி. சிங்கும், பதானும், இஷாந்த் சர்மாவும்

ஆஸ்திரேலியாவை மண்டியிடச் செய்ய வில்லையா என்று துணிந்தது பி.சி.சி.ஐ. இருபது வயதுப் பந்து வீச்சாளர்களால் சாதிக்க முடிவதை ஏன் பேட்ஸ்மேன் களால் முடியாது என்று யோசித்தது. ஒரு பரிசோதனைக்குத் தைரியமாகத் தன்னை உட்படுத்திக்கொண்டது.

**செ**க்குச் சிந்தனைகளில் உழல்வது பி.சி.சி.யின் டிரேட் மார்க். நல்ல வேளை இந்த முறை மூளைக்கு வேலை கொடுத் திருக்கிறார்கள். டெஸ்ட் போட்டிகளில் உலகின் இரண்டாவது இடத்தில் இருக் கிறது இந்திய அணி. ஆனால், ஒரு நாள் போட்டியில் தொடர்ந்து கீழேதான் இருக் கிறது. உலகக் கோப்பையில்

பட்டதைச் சாத்தியமாக்கியிருக்கிறார் கும்ப்ளே. இதை அருகில் இருந்து கவனித்து வந்த டோனி என்ன கற்றுக் கொண்டார் என்பதை ஆஸ்திரேலியா டூர் உணர்த்திவிடும். கும்ப்ளே போன்ற திறமைசாலிக்கு வாய்க்காத வாய்ப்புகளை இந்த 26 வயதில் டோனிக்கு அருளியிருக் கிறது பி.சி.சி.ஐ.

கங்குலி, டிராவிட் நீக்கத்தில் டோனி யின் பங்களிப்பு இல்லை என்று கூற முடியாது. அதேசமயம் கும்ப்ளே வீரர் களைக் கையாண்டதுபோல மைதானத்தில் விழிப்போடு நடந்துகொள்ள வேண்டியது டோனியின் கடமை. கூடவே பதவியைத் தட்டிப் பறிக்கக் காத்துக்கிடக்கும் யுவ்ராஜ். அடுத்த சில மாதங்களில் நெருப்பாற்றில் நீந்த வேண் டிய கட்டா யத்தில் இருக் கிறார் டோனி. ●

# Vs டோனி!

சறுக்கியபோதே சுதாரித்திருக்க வேண் டும். தொடர்ந்து அதே அணியே நீடித்தது. சச்சின், யுவ்ராஜ் சிங் புண்ணியத்தால் தென் ஆப்பிரிக்காவையும் பாகிஸ்தானையும் வெல்ல முடிந்தது. ஆனால், இவர்கள் இருவரும் சோர்ந்தபோது இங்கிலாந்திட மும் ஆஸ்திரேலியாவிடமும் தோற்றுப் போனது இந்திய அணி. ஆஸ்திரேலியா வில் சிக்ஸரும் ஃபோரும் அடிப்பது சாத்தியமில்லை. ஒன்று, இரண்டு ரன் களைக் கவனமாகப் பொறுக்கிக்கொள்ள வேண்டும். ஃபீல்டிங்கில் முனைப்பாக இல்லாவிட்டால் கட்டாயம் முப்பது ரன்களை இழக்க வேண்டி வரும். இதெல்லாம் யோசித்துதான் இப்படியொரு அதிரடியில் இறங்கியிருக்கிறது பி.சி.சி.ஐ. கௌரவமாக வழியனுப்பியிருக்கலாம் என்றொரு கருத்து உண்டு. பி.சி.சி.ஐ.யிடம் அவ்வளவு தூரம் எதிர்பார்ப்பது வீண்.

**சா**த்தியமேயில்லை என்று சொல்லப்




ச.ந.கண்ணன்

எஸ்.பி.முத்துராமன்

'ப்ரியா' படத்தில் ஒரு படகு சேஸிங் காட்சி வரும். இது அந்தக் காலத்தில் தமிழுக்குப் புதுசு. இந்தக் காட்சியைப் படம் பிடிக்க, மோட்டார் போட் ஓட்டுவதில் நிபுணத்துவம் பெற்ற ஹாங்காங்காரர்களை ஏற்பாடு செய்திருந்தோம். ரஜினி செல்லும் படகை துரத்திச் செல்வது போன்ற காட்சி என்பதால், 'மோட்டார் படகை எப்படி ஓட்டுவது என்று கொஞ்சம் பழகிக்கொள்ளுங்கள். படகை ஓட்டிச் செல்வது போல உங்களை க்ளோஸ்அப் எடுத்துக்கொண்டு, சேசிங் காட்சிகளை டூப் போட்டு லாங்ஷாட்டில் எடுத்துக்கொள்கிறோம்' என்று ரஜினியிடம் சொல்லியிருந்தேன். அவரும் சரி என்று சொல்லிவிட்டு படகில் ஏறி உட்கார்ந்துகொண்டார். நான், கேமராமேன் பாபுவிடம் அந்த சேஸிங்கை எப்படிப் படம் பிடிப்பது என்று விவாதித்துக் கொண்டிருந்தேன்.

ஷாட் ரெடி. ரஜினி படகில் அமர்ந்தார். கேமரா ஓட ஆரம்பிக்க, நிமிடத்துக்கு நிமிடம் ரஜினியின் படகு வேகம் பிடித்தது. பின்னாலேயே வில்லன்களின் படகு துரத்த ஆரம்பித்தது. இவர்கள் வேகத்துக்கு ஈடு கொடுக்கும் வகையில் அந்தக் காட்சியைப் படம் பிடித்தார் பாபு. ஷாட் ஓ.கே. ஆக, நான் ரஜினியிடம், 'டூப் போட்டு லாங் ஷாட்டில் எடுக்கிறேன் என்று சொன்னேனே! எதற்காக இப்படி ரிஸ்க் எடுத்து நீங்களே படகை ஓட்டிச் சென்றீர்கள்?' என்று உரிமையுடன் கோபித்துக் கொண்டேன். 'உங்களுக்கு நீச்சல் தெரியுமா?' என்று கேட்க, அவரோ மிகவும் கூலாக, 'எனக்குத் தெரியாதே உங்களுக்குத் தெரியுமா?' என்றார். 'எனக்கும் நீச்சல் தெரியாது' என்று சொன்னேன். ''தப்பித் தவறி நாம தண்ணீரில் விழுந்துட்டா, இத்தனை பேர் இருக்காங்களே, அவர்களில் யாராவது நம்மைக்

# கோபத்தை உண்டாக்கிய ரஜினி!





காப்பாத்த மாட்டாங்களா?'' என்றவர், ''மோட்டார் போட் ஓட்டப் பழகச் சொன்னீர்கள் இல்லையா! ஓட்டிப் பார்த்தேன். ரொம்பவும் சரியாகத்தான் இருந்தது. அதனால்தான் டூப் வேண்டாம்; நாமே ஓட்டுவோம் என்று முடிவு செய்து ஓட்டி விட்டேன். தண்ணீரில் போட் ஓட்டுவது, ரோட்டில் கார் ஓட்டுவதுபோலத்தான் இருந்தது'' என்றார்.

**ஹா**ங்காங் ஷூட்டிங்கின்போது நெஞ்சு கனக்கும் சம்பவம் ஒன்றும் நடந்தது. கேமரா உள்ளிட்ட பல்வேறு படப்பிடிப்புக் கருவிகளையும் ஒரு லொகேஷனிலிருந்து, இன்னொரு லொகேஷனுக்கு எடுத்துக்கொண்டு செல்வதற்காக ஒரு மினி லாரி ஏற்பாடு செய்திருந்தோம். டிரைவர் ஒரு சைனாக்காரர். மொழி தெரியாது போனாலும், எங்கள் குழுவில் ஒருவர் போல ஆகிவிட்டார்.

ஹாங்காங்கில் எடுக்க வேண்டிய எல்லா காட்சிகளையும் எடுத்து முடித்துவிட்டாலும், ஓர் ஆகாய விமானம் ரன்வேயிலிருந்து டேக் ஆஃப் ஆவது போல் டாப் ஆங்கிளிலிருந்து ஒரு ஷாட் எடுக்க விரும்பினோம். அதை எங்கே, எப்படி எடுப்பது என்று பேசிக்கொண்டிருந்தபோது, உள்ளூர்க்காரரான டிரைவரிடம் ஐடியா கேட்கலாம் என்று, அவரிடம் எங்கள் தேவையைச் சொன்னோம். அவர், 'என்னுடன் வாருங்கள். மலைப் பகுதி ஒன்றுக்கு அழைத்துக் கொண்டு போகிறேன். அங்கே ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து உங்களுக்குத் தேவையானபடி படம் பிடித்துக்கொள்ளலாம்' என்று கூறினார். உடனே ரஜினி உட்பட அனைவரையும் ஓட்டலுக்கு அனுப்பி வைத்துவிட்டு, கேமராமேன் பாபுவும் நானும் மட்டும் அந்த டிரைவருடன் மினி லாரியில் ஏறிப் புறப்பட்டோம். நீண்ட நேரப் பயணம். போய்ச் சேரவே மாலை ஐந்து மணியாகிவிட்டது. பாபுவிடம், ''தப்பு செய்துவிட்டோமோ! இந்த சைனாக்காரனை நம்பி வந்திருக்கக் கூடாதோ!'' என்று நான் கவலைப்பட்டேன்.

திடீரென்று ஓர் இடத்தில் லாரி நிற்க, இறங்கிப் பார்த்தால், பறவைப் பார்வையாக விமான நிலையம் தெரிந்தது. சிறிது நேரத்தில், ஒரு விமானம் டேக் ஆஃப் ஆவது தெரிந்தது. பாபு அந்தக் காட்சியை அப்படியே தன் கேமராவில் பதிவு செய்துகொண்டார். நான் நிம்மதிப் பெருமூச்சு விட்டேன். நாங்கள் காலையில் ஏழு மணிக்குச் சாப்பிட்டது. மதிய உணவு சாப்பிடவே இல்லை. பசி வயிற்றைக் கிள்ளியது. 'இன்னும் இரண்டு மணி நேரம் பயணம் செய்து கீழே இறங்கிப் போனால்தான் சாப்பாடு' என்று நினைத்த மாத்திரத்திலேயே பசி இன்னும் அதிகமானது. சட்டென்று சைனாக்காரரின் குரலைக் கேட்டுத் திரும்பினோம். அவரது கைகளில் ஒரு பீங்கான் பாத்திரம். அது நிறைய சைனீஸ் நூடுல்ஸ். தான் சாப்பிடுவதற்காகக் கொண்டு வந்திருந்த நூடுல்சை சாப்பிடாமல் வைத்திருந்து, எங்களுக்குப் பசித்த சமயத்தில் பகிர்ந்து உண்ண முன்வந்த அவரது விருந்தோம்பலில் மனம் நெகிழ்ந்து போனோம்.

'மனித இனம் என்பது ஒன்றுதான். நாடு, மொழி, மதம், இனம் என்பதெல்லாம் நாமே போட்டுக்கொண்ட எல்லைக் கோடுகள்' என்ற உண்மை புரிந்தது. இன்றைக்கும் இந்தச் சம்பவத்தை நினைத்தால், என் கண்களில் என்னையும் அறியாமல் கண்ணீர் கசியும்.



## ரசிகர் மன்ற ராஜாக்கள்



### ரஜினியாவே இருக்கட்டும்!

"நமக்கு எல்லாமே தலைவர்தாங்க. அவர் அரசியலுக்கும் வர வேண்டாம்; முழு ஆன்மிகவாதியாவும் மாற வேண்டாம். எப்போதும் ரஜினியாவே அவர் இருந்தா அதுவே போதுமுங்க. ஆனா, அவர் என்ன முடிவு எடுத்தாலும் அதைச் செய்து முடிக்க என்னை மாதிரி இலட்சக்கணக்கான பேர் காத்துக்கிட்டு இருக்கோம்'' என்று அதிரடியாகப் பேசுகிறார் ரஜினி சங்கர். திருவண்ணாமலையைப் பூர்வீகமாகக் கொண்ட இவர், தற்போது வசிப்பது சென்னையில். ரஜினியின் முரட்டு ரசிகர். நண்பர்கள் மத்தியில் ரஜினி காளை! "முரட்டுக் காளை படம் பார்த்துட்டு வந்ததிலிருந்து நண்பர்கள்கிட்ட ரஜினி, காளையை அடக்கிட்டுப் பாடுற பாட்டைப் பத்தித்தான் எப்போதும் பேசிக்கிட்டு இருந்தேன். அப்புறம் இப்படித்தான் நம்ம பசங்க கூப்பிட ஆரம்பிச்சுட்டாங்க'' என்கிறார்.

'படம் பாக்கறதோட சரியா?' என்றால், "என்னால முடிஞ்ச உதவியைத் தலைவர் பெயரால செஞ்சுக்கிட்டுத்தான் இருக்கேன். அவரோட பிறந்த நாள் அன்னைக்கு முதியோர் இல்லத்துக்குப் போவேன். அங்க இருக்கிற ரெண்டு பேருக்கு மூக்குக் கண்ணாடியெல்லாம் வாங்கிக் கொடுத்திருக்கேன். அப்பா, அம்மாவை மதிச்சாலே என் தலைவர் மாதிரி எல்லோருமே உசந்த இடத்துக்கு வந்துரலாம்'' என்கிறார். 'ரோபோ வரப் போகுதே' என்றால், "அதுக்காகத்தான் காத்திருக்கோம். என்னைக்கும் தலைவருக்கு உள்ள கிரேஸ் மாறவே மாறாது'' என்கிறார்.

- கமலி

அதேபோல் 'ப்ரியா' படம் தயாரானதும், அதை ஏவி.எம். அவர்கள் பார்த்துவிட்டுச் சொன்ன பாராட்டு என்றென்றைக்கும் எனக்கு மறக்காது. "சிங்கப்பூருக்குப் போய் வாரம், பத்து நாள் தங்கி ஊர் சுற்றிப் பார்த்தால்கூட இவ்வளவு இடங்களைப் பார்க்க முடியாது. நீ எப்படிப்பா இருபது நாள்ல இவ்வளவு இடத்தை படம் பிடிச்சிக் கொண்டு வந்தே? ரஜினி ரொம்ப நல்லா நடிச்சிருக்கார். உங்க யூனிட்ல எல்லாத்துக்கும் என்னோட

"வாரம், பத்து நாள் தங்கி ஊர் சுற்றிப் பார்த்தால்கூட இவ்வளவு இடங்களைப் பார்க்க முடியாது."

வாழ்த்துக்களைச் சொல்லப்பா!'' என்றார்.

ஃபாரின் சென்று எடுத்த தமிழ்ப் படங்களிலேயே எம்.ஜி.ஆரின் 'உலகம் சுற்றும் வாலிபன்' படம்தான் மிகப்பெரிய வெற்றிப் படம். அதற்கு அடுத்த ஹிட்டாக அமைந்தது ப்ரியா. படத்தில் வக்கீல் கணேஷாக ரஜினி நடிக்க, அவரது உதவியாளர் வசந்த் ரோலுக்குப் பொருத்தமான, துறுதுறுப்பான தமிழ் நடிகர்கள் பலரும் இருக்க, கன்னட நடிகர் அம்பரீஷை நடிக்க வைத்ததன் காரணம் என்ன தெரியுமா?



(பயணம் தொடரும்)

எழுத்து வடிவம்:
**எஸ்.சந்திரமௌலி**

# பள்ளிக்கூடம்...

அம்மா
படிக்கச் சொல்கிறாள்
அப்பாவும்
அப்படியே சொல்கிறார்
பள்ளிக்கூடமும்
விரட்டுகிறது
படியென்று
அவர்களின் இலக்கை
என் மேல்
கட்டடமாய் எழுப்பும்
போதெல்லாம்
தரைமட்டமாகிறது
என் உலகம்

- ஆங்கரை பைரவி

மணல் வீடு கட்டவும்
மணிக்கணக்கில் ஆடவும்
வாய்ப்பாடு படிக்கவும்
வண்ணப் படம் தீட்டவும்
ஆசைதான்...
ஆனால்,
வயிற்றுப் பசி தீர்க்க
வேலைக்குக் கிளம்பினேன்
பின்புதான் தெரிந்தது
தீர்ந்தது என்
பள்ளிப் பருவமென்று

- ஆர்.கலா



# உன்னைத்தான் நம்பியிருக்கேன்!

தமிழ்நாயகி

ஆறுமுகத்தைப் பார்த்தவுடனேயே முகம் மாறினான் அருண். கொஞ்சம் முன் கூட்டியே புறப்பட்டிருந்தால் அவரைப் பார்ப்பதைத் தவிர்த்திருக்கலாம். இப்போது என்ன பதில் சொல்லலாம் என்று யோசித்தபடியே, ''வா...ங்க...'' என்றான்.

அவசரமாக காஃபியை ஆற்றியபடி வந்தாள் அவனது மனைவி தரணி.

ஆறுமுகம் அருணின் நண்பர். நேற்றும் அதற்கு முந்தைய நாளும் அவனைப் பார்க்க வந்திருந்தார். அருண் இல்லை. தரணியிடம் விஷயத்தைச் சொல்லிப் போனார்.

''பொண்ணுக்குத் திடீர்னு நிச்சயம் ஆயிடுச்சி. பணம் தேவை. இருபதாயிரம் கடனாகக் கொடுத்தால் பி.எஃப். லோன் பணம் வந்ததும் தந்துவிடுகிறேன். அருணிடம் சொல்லும்மா. ரொம்பவும் நம்பியிருக்கேன். நாளைக்கு வருகிறேன்'' என்று விட்டுப் போயிருந்தார்.

தரணி சொன்னாள். ''பாவங்க, அவர்! உங்களை ரொம்பவும் நம்பியிருக்கார். கைல பணம் இருக்கு, கொடுங்க. பிறகு வாங்கிக்கலாம்'' என்றாள்.

''உனக்குத் தெரியாது. ஏற்கெனவே நிறைய கடன்பட்டிருக்கார். பணம் தந்தால் திரும்பி வராது. எப்படித் தர முடியும்? இல்லைன்னு சொல்லிடு'' எனச் சொல்லி வைத்திருந்தான் அருண்.

ஆனால், இப்போது நேருக்கு நேர் வந்துவிட்டாரே யோசித்தான்.

காஃபியை குடித்து முடித்தார் ஆறுமுகம். திருமணப் பத்திரிகையை தட்டில் வைத்து நீட்டியபடியே,

''பணம் தேவை. கேட்டிருந்தேன். எனக்கு வரவேண்டிய இருபதாயிரம் வந்து விட்டது. நீ பணத்துக்கு எங்க அலையறியோன்னுதான், பணம் வேணாம்ங்கற விஷயத்தைச் சொல்லிப் போக வந்தேன். முதல் பத்திரிகை உனக்குத்தான் அருண். குடும்பத்தோடு வந்துவிடு'' என்றார்.

மனைவியின் பார்வை சாட்டையாய்த் தைக்க, அருண் தலை குனிந்தான். ●

# "காதலிக்க நேரமில்லை!"

'பழனி' தனக்கு ஆக்ஷன் இமேஜை உண்டாக்கித் தந்திருப்பதில் பரத்துக்கு செம திருப்தி. "ரொம்ப யோசிச்சேன் இந்தக் கதாபாத்திரத்தை ஏத்துக்கிறதுக்கு. கொஞ்சம் பிசகினாலும் ஆக்ஷனும் பன்ச் டயலாக்கும் அப்படியே திருப்பி அடிச்சிடும். இந்த அபாயத்த பேரரசு சார்கிட்ட சொன்னேன். அவரு கவனமா செதுக்கி எனக்கு ஆக்ஷன் கம்பளம் விரிச்சுத் தந்திருக்காரு" என்கிறார் பரத்.

"விஜய் சார் படம் பாத்துட்டு 'அண்ணா, கலக்கிட்டீங்கண்ணா'ன்னு பாராட்டினாரு. அவர்தான் என் ரோல் மாடல். அவரே நான் நல்லா பண்ணியிருக்கேன்னு சொன்னதுல ரொம்ப சந்தோஷம். அடுத்து 'நேபாளி' வருது. இதுல மூணு விதமான கெட்டப். ரகளையா வந்திருக்கு படம்.

பொதுவா கெட்டப்ப மாத்தி நடிக்கிறதுல எனக்கு உடன்பாடில்ல. ஆனா டைரக்டர் துரை சார் இந்தக் கதைய சொன்ன விதத்துல இம்ப்ரஸாகி நடிக்க ஒப்புக்கிட்டேன். ஆக்ஷன், ரொமான்ஸ்னு எல்லாவிதமான படங்களும் பண்ணணும்னு விரும்புறேன்.

காதல், கல்யாணத்துக்கெல்லாம் இப்ப எனக்கு நேரமில்ல. தொடர்ச்சியா வேலை வெச்சுக்கிட்டு அதை நோக்கி ஓடறதுக்கே நேரம் சரியா இருக்கு. ஆனா, எது செஞ்சாலும் பகிரங்கமா எல்லார்கிட்டயும் சொல்லிட்டுதான் செய்வேன். என் பெற்றோர் தேவையான சுதந்திரத்த எனக்குத் தந்திருக்காங்க. அடிக்கடி சம்பளம் ஏத்துறதா சொல்றதையும் மறுக்கறேன். எல்லா விதத்துலயும் அலசி ஆராய்ந்து, க்ராஜுவலாத்தான் சம்பளம் ஏத்துறேன். அந்தளவுக்கு உழைப்பையும் தர்றேன்.

அடுத்து மறுபடி பேரரசு சார் கூட ஒரு படம் பண்ண பேச்சுவார்த்தை நடந்துட்டிருக்கு. சுரேஷ் கிருஷ்ணா டைரக்ஷன்லயும் நடிக்கறேன். நல்ல படங்கள்தான் இனி என் டார்கெட். அதை நோக்கித்தான் இனி என் பயணம் இருக்கும்" என்கிறார் பரத்.

– மதுமிதா



## கலகம் பிறந்தது எனக்காக - 4

**ஆர். முத்துக்குமார்**



செப்டம்பர் 2005. இறுதியில் ஒரு பிரபல வார இதழ், சர்வே ஒன்றை வெளியிட்டது 'பாலுறவு மற்றும் இளம்பெண்கள்' என்கிற தலைப்பில். குஷ்புவும் தமது கருத்தைக் கூறியிருந்தார்.

'பெண்கள் திருமணமாகும்போது கன்னித்தன்மை கலையாமல் இருக்க வேண்டுமென்பது போன்ற எண்ணங்களிலிருந்து, நமது சமூகம் விடுதலையாக வேண்டும். கல்வி பெற்ற எந்த ஆண் மகனும், தான் திருமணம் செய்யப் போகிறவள் கன்னித்தன்மையோடு இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்க மாட்டான்' என்று பேசியிருந்தார் குஷ்பு. இந்தப் பேச்சு விளைவித்த அதிர்வுகள் அவரை நிலைகுலையச் செய்ய, மறுபடியும் வெகுண்டெழுந்து 'திருமணத்துக்கு முன் செக்ஸ் வைத்துக்கொள்ளாத ஆண்-பெண் இங்கு எத்தனை பேர் இருக்கிறார்கள்?' என்று கேட்டு எரிகிற நெருப்பில் எரிவாயுவைச் செலுத்தினார். விளைவு, அவர் மீது குற்றப்பிரிவுகள் 500, 504, 509 ஆகியவற்றின் கீழ் அவதூறு வழக்குகள் பாய்ந்தன. வழக்கு நடந்த இடங்களுக்கெல்லாம் நடையாய் நடந்தார் குஷ்பு.

அந்தக் களைப்பு அடங்குவதற்குள் அடுத்த சர்ச்சை. பெரியாரின் வாழ்க்கையைச் சித்திரித்த 'பெரியார்' திரைப்படத்தில் மணியம்மையாக நடிப்பதற்கு குஷ்புவை ஒப்பந்தம் செய்யப் போக, வந்தது வினை.

'தமிழகப் பெண்களின் கற்பைக் கொச்சைப்படுத்திப் பேசிய குஷ்பு, 'பெரியார்' படத்தில் நடிக்கக் கூடாது. அந்தப் படத்துக்கு தமிழக அரசு ரூ.95 இலட்சம் நிதி கொடுக்கிறது. தமிழர்களின் வரிப்பணம் குஷ்புவுக்குச் சம்பளமாகப் போவதை அனுமதிக்க முடியாது. மணியம்மையாக குஷ்பு நடித்தால் தமிழகப் பெண்கள் அவரைப் பார்த்துக்கொள்வார்கள்' என்று சீறியது பா.ம.க.

ஆனால், இந்த முறை குஷ்பு கொஞ்சமும் அலட்டிக்கொள்ளவில்லை.

**அடுத்த**

'எதிர்ப்பு வருகிறது என்பதற்காகப் பயந்து ஓடிவிட மாட்டேன். மூலையில் முடங்கி அழ மாட்டேன். நான் ஒன்றும் கோழை அல்ல. எனக்கு ஏற்பட்டிருக்கும் பிரச்னையை நானே எதிர்கொள்வேன். 'பெரியார்' படத்தில் நான் மணியம்மை கதாபாத்திரத்தில் நடிக்கத்தான் போகிறேன். என்னைத் தடுக்க எவருக்கும் உரிமை யில்லை' - வாங்கிய அடிகளும் உணர்ந்த வலிகளும் அவருக்கு உரமேற்றியிருந்தன. தைரியமாக எதிர்த்தார்; மணியம்மை வேடத்திலும் நடித்தார்.

ஆனால், இடைச்செருகலாக இன்னொரு விவகாரம் கிளம்பியது. 'படத்தில் குஷ்பு தொடர்பான காட்சிகளைப் படம் பிடிக்க மாட்டேன்' என்று முரண்டு பிடித்தார் அப்படத்தின் ஒளிப்பதிவாளர் தங்கர் பச்சான். எல்லாம் பழைய பகை! சொன்ன படியே அவருடைய உதவியாளர்கள்தான் குஷ்பு தொடர்பான காட்சிகளைப் படம் பிடித்தனர்.

**எ**ல்லாம் கொஞ்ச நாள்தான். குஷ்பு வைப் பற்றிய கட்டுரைகள் இல்லாமல் பத்திரிகைகள் வெளியாக முடியுமா என்ன? திடீரென்று ஒருநாள் காலை செய்தித் தாள்களின் வழியே அடுத்த பிரச்னை அரங் கேறியது. ஒரு திரைப்படத் தொடக்க விழாவின்போது சாமி சிலைக்கு முன்னால் செருப்புக் காலுடன் அமர்ந்திருந்தார் குஷ்பு. அதுவும் கால்மேல் கால் போட்டுக் கொண்டு. 'அய்யகோ, இஸ்லாமியரான குஷ்பு, இந்து தெய்வங்களை அவமதித்து விட்டார்' என்று உடனேயே குதிக்கத் தொடங்கின சில இந்து அமைப்புகள். ஆங்காங்கே கண்டனக் குரல்கள்... வழக் குகள்... மீடியா குஷ்புவைச் சூழ்ந்து கொண்டு கேள்விக் கணைகளை வீசிற்று!

'இந்து மதம் மட்டுமல்ல, எல்லா மதங் களையுமே மிகவும் மதித்து நடப்பவள் நான். பிறப்பால் இஸ்லாமியராக இருந் தாலும், திருமணத்துக்குப் பிறகு இந்து வாகத்தான் வாழ்கிறேன். வீட்டில் தினமும் பூஜை செய்கிறேன். அதே மேடையில் எல்லோரும் செருப்புக் காலுடன் அமர்ந்தி

● சர்ச்சையான வெளியீடு...



ருக்கும்போது நான் மட்டுமே தவறு செய்ததாகச் சொல்லி, என்னை மட்டும் ஏன் குறி வைக்கிறார்கள் என்பது தெரிய வில்லை?' என்றார் குஷ்பு.

ஆனாலும் வழக்குகள் நடந்துகொண்டு தான் இருக்கின்றன. சர்ச்சைகள், துரத் திக்கொண்டுதான் இருக்கின்றன. சில சமயம் அவர் தாமாகவும் பிரச்னைகளை விலை கொடுத்து வாங்குவது உண்டு. உதாரணம், அண்மையில் தாம் கலந்து கொண்ட புத்தக வெளியீட்டு விழாவில், விடுதலைச் சிறுத்தைகள் கட்சியின் தலைவர் திருமாவளவனுடன் நிகழ்ந்த காரசார மோதல். திருமா, 'குஷ்புவுடன் நட்பு ரீதியில்தான் பேசினேன்' என்று கூறிய பிறகுதான் அந்தப் பிரச்னை முடிவுக்கு வந் தது. தற்காலிகமாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறார் குஷ்பு. அடுத்து எந்த வெடியை எப்போது கொளுத்திப் போடு வார் என்று ஆவலோடு காத்துக்கொண் டிருக்கிறது மீடியா!

***(அடுத்த வாரம் பால் தாக்கரே)***

படம்: **ஸ்ரீஹரி**

# வெடி எப்போது?

''அர்ச்சனை தமிழ்ல பண்ணவா சமஸ்கிருதத்துல பண்ணவா...''
''வீட்ல என் மனைவி தமிழ்ல பண்ணுவா, நீங்க சமஸ்கிருதத்துலயே பண்ணுங்க.''

- என்.எஸ்.பாலசுப்பிரமணியன்





''வரவர என்னோட உடம்பும் என் மனைவி மாதிரியே ஆயி டிச்சு...''
''எப்படி?''
''என்ன சொன்னாலும் கேட்க மாட்டேங்குது!''

- சீர்காழி வி.ரேவதி



''அந்த பூசாரிகிட்ட என் இவ்ளோ கூட்டம்?''
''அவர்கிட்ட அருள் வாங்கினா சீக்கிரமா டைவர்ஸ் கிடைக்குதாம்!''

- எம்.வெங்கடேஸ்வரன்



''மூச்சை நல்லா இழுத்து விடுங்க பார்ப்போம்!''

''ஏன் டாக்டர்?''

''ஒரே புழுக்கமா இருக்குது. காத்து வாங்கலாம்னு தான்!''

# மூச்சை இழுத்து விடுங்க!



''போர் மேகங்கள் நம் நாட்டைச் சூழ்ந்துள்ளன மன்னா!''

''போ மேகங்களே... என்று ஆணையிடுகிறேன் அமைச்சரே!''



''அரசே! அண்டை நாட்டு மன்னன் வைத்தியரிடம் ஓலை கொடுத்து அனுப்பியுள்ளான்!''

''என் மந்திரியாரே?''

''தங்களுக்கு அதிர்ச்சி வைத்தியம் கொடுக்கத்தான்!''

- வைகை ஆறுமுகம்



## வையத் தலைமை கொள் 13

இராமாயணத்தில் இராமர், சீதையைப் பிரிந்து, காட்டில் பல கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு, சீதை போன இடமே தெரியாமல் தவித்திருந்த காலகட்டம் அது. அப்போது எதிர்பாராத விதமாய், கிஷ்கிந்தையில் அனுமனைச் சந்தித்ததுதான் இராமரின் பிரச்னைகளுக்குத் தீர்வினை எட்டும் திருப்புமுனையாக அமைந்தது. பிரச்னை முடிவுக்கு வந்து இராமருக்குப் பட்டாபிஷேகம் நடக்கும்போது, இதற்குத் தாம்தான் காரணம் என்ற கர்வம் கொஞ்சமும் இல்லாமல், இராமரின் காலடியில் கரம்கூப்பி மண்டியிட்டு அமர்ந்திருக்கும் அனுமனின் அந்தப் பணிவுதான் மிகப் பெரிய தலைமைப் பண்பு.

ஒருமுறை வெளிநாடு போய்விட்டு வந்தாலே நம்மில் பலருக்கு நடை, உடை, பாவனைகள் மாறிவிடுகின்றன. அணிந்துகொள்ளும் உடையும், அணியும் விதமும், வார்த்தைகளும், ஏதோ வெளிநாட்டிலேயே பிறந்து வளர்ந்ததைப் போன்று ஒரு தோற்றத்தை உருவாக்கப் படாதபாடுபடுகிறோம்.

இன்னும் ஒரு படி மேலே போய், நம் நாட்டைப் பற்றி மட்டமான கருத்துகளைக் கூறுவதையும் வாடிக்கையாகக் கொண்டிருக்கிறோம்.

ஆனால், வெளிநாட்டில் படித்துப் பட்டம் பெற்று, அங்கேயே பல ஆண்டுகள் சிறந்த வழக்கறிஞராகப் பணியாற்றி, இந்தியா திரும்பிய காந்திஜி என்ன செய்தார்? மதுரை அருகே ஓர் ஏழைக் குடியானவன் சட்டை இல்லாமல் இருப்பதைப் பார்த்து, தாமும் அரை நிர்வாணப் பக்கிரியாக மாறினார்! தம்முடைய நடை, உடை, பாவனை எல்லாம் ஒரு சாமான்யனை ஒத்திருக்கும்படி மாற்றிக்கொண்டார். அவருக்கு நாட்டுப் பற்றும் நாளுக்கு நாள் அதிகமானதே தவிர, கொஞ்சமும் குறையவில்லை. ஆங்கிலம் நன்றாகத் தெரிந்திருந்தும், தாய்மொழியை விடவில்லை. மேலும், பல இந்திய மொழிகளைக் கற்றுக்கொள்ள முயற்சி செய்தார். 'விரும்பி ஏற்றுக்கொண்ட வறுமைதான்' அவரது வாழ்க்கை முறையாக ஆனது.

ரிஷிகேஷ் வழியாக சுவாமி விவேகானந்தர் சென்றுகொண்டிருந்த நேரம். கங்கைக் கரையில் ஒருவர் தியானம் செய்துகொண்டிருப்பதைக் கண்டார். அவர் முகத்தைப் பார்த்ததுமே மிகப்பெரிய ஞானி என்பது விவேகானந்தருக்குப் புலனாயிற்று. அவரிடம் சென்று பேச ஆரம்பித்தார். ஞானிகளைப் பற்றிப் பேச்சு

**எதைச் செய்ய வேண்டுமோ அதற்குண்டான திறமைகளை வளர்த்துவிடுவதே மேலாண்மை!**

வந்தபோது விவேகானந்தர், பவஹாரி பாபாவைச் சந்தித்ததாகச் சொன்னார். அப்போது ஞானியின் முகம் பிரகாசம் அடைந்தது. ''அப்படியா பாபாவைத் தெரியுமா?'' என்று கேட்டார். பின்னர், ''பாபா ஆஸ்ரமத்தில் ஒரு திருட்டு நடந்ததே தெரியுமா?'' என்றார்.

''தெரியுமே'' என்ற விவேகானந்தர் அந்தக் கதையைச் சொன்னார் :

''பாபாவின் ஆஸ்ரமத்தில் நுழைந்த திருடன் சில பொருட்களை எடுத்து, மூட்டையில் போட்டுக் கட்டிக்கொண்டிருக்கும்போது, தூங்கிக் கொண்டிருந்த பாபா எழுந்துவிட்டார். உடனே திருடன் பயந்துபோய், அந்த மூட்டையை அங்கேயே போட்டுவிட்டு ஓட்டம் எடுத்தான். ஆனால், பாபாவோ திருடன் பின்னால் ஓடி, துரத்திப் பிடித்து, அந்த மூட்டையை அவனிடமே கொடுத்து, 'அப்பா, இது உன் சொத்து எடுத்துக்கொள்' என்று கூறினார்.

இந்தக் கதையை சுவாமி விவேகானந்தர் சொல்லி முடித்தவுடன், அந்த ஞானி கண்ணீருடன் கூறினார். ''அந்தத் திருடன் நான்தான். பாபாவின் அந்தச் செயல் என்னை மாற்றிவிட்டது. திருட்டுத் தொழிலை விட்டுவிட்டு, நானும் பாபாவைப் போல ஆத்ம ஞானத் தேடலில் இறங்கிவிட்டேன்'' என்றார்.

**நா**ம் மற்றவர்களை நடத்தும் விதத்தில், யாரையும் நம் வழிக்குக் கொண்டு வந்துவிட முடியும். அதிகாரத்தைவிட பணிவு மிகவும் வலியது.

குழுவாக இணைந்து வேலை செய்யும்போது, தலைவனுக்குக் குழுவில் இருக்கும் ஒவ்வொருவர் மீதும் நம்பிக்கை இருக்க வேண்டும்.

# பணிவு சொல்லும் பாடம்!

**சேவாலயா முரளிதரன்**

செய்யும் செயலுக்கு வேண்டிய திறமை இருக்கிறதா என்று சோதித்து, இல்லாத திறமையை வளர்த்துக்கொள்ள என்ன வழி என்பதை குழுவின் தலைவன் யோசிக்க வேண்டும். 'மேலாண்மை என்பது இதைச் செய், அதைச் செய் என்று சொல்லிக் கொண்டு இருப்பது அல்ல. எதைச் செய்ய வேண்டுமோ அதற்குண்டான திறமைகளை வளர்த்துவிடுவது ஆகும்' என்பது மகாத்மாவின் கூற்று.

திறமைகளை வளர்த்துக் கொள்ள வழிகாட்டி, பிறகு



அந்தத் திறமைகளை வெளிப்படுத்தச் சந்தர்ப்பம் கொடுப்பவனே தலைவன் ஆகிறான். அனைத்து வேலைகளையும் ஒரு குழு செய்து முடிக்கும்போது, தலைவன் அடிக்கடி தலையிடத் தேவையில்லாமல் போகிறது. எனவே, அந்தக் குழுவே முடிவுகளை எடுத்து, வேலை செய்ய ஆரம்பிக்கிறது. இந்த நிலைக்கு வந்து விட்ட குழுவைத்தான் Empowered Team என்று கூறுகிறோம். இது ஏற்பட வேண்டு மெனில் முதலில் தலைவன், தம் குழுவில் உள்ள அனைவரையும் மதித்து, பணிவாக நடந்துகொண்டு வழிகாட்டி வழிவிடவும் வேண்டும். மாறாக, ஒவ்வொரு விஷயத்திலும் தலைவன் தலையிட்டுக் கொண்டு இருந்தால், குழுவில் இருப்பவர்கள் முழுவதும் தலைவனைச் சார்ந்தவர்களாகவே உருவாகுவார்கள். தாமாகவே எந்த முடிவும் எடுக்கும் திறமை அற்றவர்களாக, எல்லாச் செயல்களும் தாமதம் அடையக் காரணம் ஆகிறார்கள்.

தலைவன் பணிவுள்ளவனாக இருந்தால் மட்டுமே, புதிய தலைவர்கள் உருவாக வழிவிடுகிறான். 'யாவரையும் மதித்து வாழும்' தலைவனே ஆரோக்கியமான சமுதாயம் உருவாகக் காரணமாக இருக்கிறான்.

*(சுவாசிப்போம்)*

படங்கள் : **ஸ்ரீஹரி**

## மின்னல் கதை

# பொய்!

**வி.கே. லக்ஷ்மி நாராயணன்**

அம்மாவிடம் இருந்து மணியார்டர் வந்திருந்தது. ரூபாய் மூன்றாயிரம் பெற்றுக் கொண்ட ராஜா, பதைபதைக்கும் நெஞ்சுடன் கண்களை கூப்பனில் மேய விட்டான். நுணுக்கி நுணுக்கி இருந்தாலும் தெளிவாக எழுதியிருந்தாள் அம்மா.

'அன்புள்ள ராஜாவுக்கு... உனக்கு வேலை போய்விட்டது. அதனால் மாதாந்திரப் பணம் இனி அனுப்ப இயலாது என்று எழுதியிருந்தாய். துடித்துப் போய் விட்டேன். பெண்டாட்டி, இரண்டு குழந்தைகளை வைத்துக்கொண்டு எவ்வளவு சிரமப்படுவாய் என்பது எனக்குத் தெரியும். அதனால் நகையை விற்றுப் பணம் அனுப்பியிருக்கிறேன், பெற்றுக்கொள். அதோடு அக்கம் பக்க வீடுகளில் வேலை செய்து என்னால் முடிந்த அளவு மாதா மாதம் உனக்குப் பணம் அனுப்புகிறேன். கவலைப்படாதே, சீக்கிரமே உனக்கு வேறு வேலை கிடைக்க எனது ஆசிகள்...'



பெண்டாட்டி பேச்சைக் கேட்டு, பணம் அனுப்புவதை நிறுத்துவதற்காக 'வேலை போய்விட்டது' என்று கடிதம் மூலம் அம்மாவுக்கு தெரிவித்த பொய்ச் செய்தி, ராஜா நெஞ்சைக் குத்திக் கிழித்தது!



# தவிர்க்க முடியாத படுகொலைகள்!

* அப்பாஜி ராவ்



மறுபடியும் தீவிரமாகப் பரவ ஆரம்பித்துவிட்டது பறவைக் காய்ச்சல். ஒரு பக்கம் மேற்கு வங்கம் பறவைக் காய்ச்சலால் கதிகலங்கிப் போயிருக்க, அடுத்து எந்த மாநிலத்துக்குள் நுழையுமோ என்ற அச்சத்திலிருக்கின்றனர் மக்கள். தமிழகத்திலும் எந்த நேரத்திலும் பரவலாம் என்கிற நிலை.

''பறவைக் காய்ச்சல் பரவக் காரணம் H5NA என்கிற வைரஸ்தான். இது பறவைகளை, குறிப்பாக கோழிகளைத் தாக்கும்போது, அவற்றை முற்றிலுமாக அழிப்பதைத் தவிர வேறு வழியே இல்லை'' என்கிறார் பேராசிரியர் அப்பாஜி ராவ். இவர் சென்னை கால்நடைக் கல்லூரியில் பணியாற்றி ஓய்வு பெற்றவர்.

''பறவைக் காய்ச்சலால் பாதிக்கப்பட்ட கோழிகளை அழிப்பது சரி! நன்றாக இருக்கும் கோழிகளையும் ஏன் அழிக்க வேண்டும் என்று சிலர் கேட்கிறார்கள். பறவைக் காய்ச்சல் வேகமாகப் பரவுகிறபோது, பாதிக்கப்படும் அபாயம் அந்தப் பகுதியில் இருக்கும் அனைத்து கோழிகளுக்குமே உண்டு. குறிப்பாக, கோழிப் பண்ணைகளில் இருக்கும் கோழிகளுக்கு அந்த ஆபத்து அதிகம். மனிதர்கள் தங்கள் சுயநலத்துக்காக ஏராளமான கோழிகளை உற்பத்தி செய்துவிட்டு, இதுபோன்ற தருணங்களில் ஒரே நேரத்தில் லட்சக்கணக்கான கோழிகளைப் படுகொலை செய்வது கொடூரமான செயல்தான். ஆனால், இதைவிட்டால் பறவைக் காய்ச்சல் காரணமாக மனிதர்களுக்கும், இதர உயிரினங்களுக்கும் ஏற்படக்கூடிய பேரழிவிலிருந்து மீள வேறு வழி இல்லை!'' என்கிறார் அப்பாஜி ராவ்.

''பறவைகளைக் கையாளும் மனிதர்களுக்கும் பறவைக் காய்ச்சல் தொற்றிக் கொள்ளும். இதனால் முதலில் ஜுரம், இருமல், ஜலதோஷம், தொண்டை பாதிப்பு என்று ஆரம்பித்து, நிமோனியா மற்றும் மூச்சுத் திணறல் ஏற்படும். இறுதியில் சிறுநீரகம் போன்ற முக்கியமான உறுப்புகள் செயலிழந்து மரணமடைய நேரிடும். எனவேதான், பறவைகளை அழிக்கும் பணியில் ஈடுபடுபவர்கள்கூட முகமூடி, கையுறை மற்றும் இதர பாதுகாப்புகளைக் கடைப்பிடிக்க வேண்டியது கட்டாயமாகிறது. பச்சையாக முட்டை சாப்பிடுவதைக் கட்டாயமாகத் தவிர்க்க வேண்டும். பறவைக் காய்ச்சல் வைரஸ், அதிக குளிர்ச்சியூட்டப்பட்ட இறைச்சியில்கூட உயிருடன் இருக்கும். எனவே, இறைச்சியை அதிக வெப்பத்தில் நன்றாகச் சமைத்துச் சாப்பிட வேண்டும்.''

**- மௌலி**



● வயோதிக உறுதி

● அனன்யா, திருச்சி

? 'மருந்து, மாத்திரை சாப்பிட்டு டாக்டர்களிடம் செல்லும் ஆத்திகர்கள்கூட நாத்திகர்கள்தான்' என சத்யராஜ் சமீபத்திய டி.வி. பேட்டியில் கிண்டலடித்திருக்கிறாரே?

! 'மனைவியின் உணர்வுகளை மதிக்கிறேன்; ஆகவே அவர் கோயிலுக்குச் செல்வதைத் தடுப்பதில்லை' என்று பெருமை பேசும் நாத்திகர்கள்கூட உறவுகள் மூலம் பாதுகாப்பு தேடும் ஆத்திகர்கள்தான்!

● எஸ்.காயத்ரி, சென்னை - 24

? இந்த வயதிலும் தளராத கலைஞரின் செயல்பாடுகள் குறித்து...?

! உடல் தளர்ந்தாலும் உள்ளத்தின் உறுதியும் அறிவுக் கூர்மையும் தளரவில்லை!



● வெஜிடேரியன் விரதம்

● பா.பாலசுப்பிரமணியன், மதுரை *

? மூன்று சதவிகித அணுமின் உற்பத்திக்காக அமெரிக்காவுக்கு அடிமை சாசனம்; இந்தியாவின் சில பகுதிகளை ஆக்கிரமித்துள்ள சீனாவுடன் போர்ப் பயிற்சி - இவையெல்லாம் நமது வெளியுறவுக் கொள்கை இன்னும் சில நாட்களில் செத்துவிடும் என்கிற அச்சத்தை எழுப்பவில்லையா...?

! வெளியுறவுக் கொள்கை சமரசப் பாதையில் செல்வதென்பது பொருளாதார ரீதியான உலகமயமாக்கலின் உடன் விளைவு. சமரசம் என்பது சமமான முன்னேற்றத்துக்கு உதவ வேண்டும்.

# மறுபடியும் ரோபோவில் ஷங்கர் - ரஜினி..?

ஆனால், ஒருதலைப்பட்சமான விட்டுக் கொடுத்தலில் முடிந்துவிடுமோ என்கிற அச்சம் எழத்தான் செய்கிறது.

● மணக்கும் பூ!




● அ.கஹைறல் ரஹ்மான், திருச்சி - 21

? வள்ளலார் கொள்கையைப் பின்பற்றி, 'இனி அசைவ உணவு சாப்பிட மாட்டேன்' என்று டாக்டர் ராமதாஸ் அறிவித்துள்ளாரே?

! வெஜிடேரியனாக மாற வேண்டிய வயதுதாங்க. வள்ளலார் சிந்தனை அதுக்குத் தூண்டுகோலாக அமைந்ததில் சந்தோஷம்.

● மஞ்சுதேவன், நவி மும்பை

? ஷேர் மார்க்கெட்டின் குறியீடு நாளுக்கு நாள் கூடி வருவது பற்றி...?

! அர்த்தமில்லாத வளர்ச்சி அபரிமிதமான வீழ்ச்சிக்கு முன்னோடி. அதுதான் தற்போது நிகழ்ந்துள்ளது.

# தராசு

## நீங்கள் கேட்டவை



● 'இயந்திர...'

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி

*? 'நடிகர்களுக்குப் பாட்டுப் பாடவும் டான்ஸ் ஆடவும் மட்டுமே தெரியும். சமூக சேவையைப் பற்றி ஒன்றும் தெரியாது' என்று மாயாவதி கூறியுள்ளாரே?*

! விதிவிலக்கான சில நடிகர்களைப் பற்றி மாயாவதிக்குத் தெரியாது போலும்! அரசியல்வாதிகளுக்குப் பணம் சுருட்டவும், உறவினர்களுக்குப் பதவிகள் தரவும்தான் தெரியும். நல்லாட்சி பற்றி ஒன்றும் தெரியாது என்று சொன்னால் மாயாவதி ஏற்பாரா!

● ...இணைப்பு!

● எம். ஏழுமலை, அக்கிரஹாரம் கிராமம்

*? ஜல்லிக்கட்டுக்குத் தடை விதிக்கும் உச்சநீதிமன்றம், ரேக்ளா பந்தயத்தில் காளைகளை அடித்துத் துன்புறுத்துவதை கவனிக்கத் தவறிவிட்டதே?*

! அப்படிப் பார்க்கப் போனால், குதிரைப் பந்தயத்துக்குத்தான் முதல் தடை விதிக்க வேண்டும். ஜல்லிக்கட்டு அளவுக்கு இதர போட்டிகள் குரூரமானவை அல்ல; ஆபத்தானவையும் அல்ல.

● நாத்திக கிண்டல்



● அகிலா அன்புமணி, ஈரோடு

*? மானிய விலையில் உரம் தருவதைவிட பாசனத்துக்குத் தேவையான நீரை விவசாயத்துக்குத் தடையின்றி வழங்குவதில் கவனம் செலுத்தலாம் என்று தொழிலதிபர் நா.மகாலிங்கம் கூறியுள்ளாரே?*

! இரண்டையும்விட முக்கியம், விஞ்ஞான ரீதியான தகவல்



விளியோகம். இதன் மூலம் இரசாயன உரத்தின் கேடுகள் குறையும். இருக்கிற நீர் வளத்தைக் கொண்டு அதிக நிலப் பரப்பில் விவசாயம் நடத்த முடியும். மகாலிங்கமே இதையும் சொல்லியிருக்கிறார்.

● பொன்விழி, அன்னூர்

*? மறுபடியும் 'ரோபோ'வில் ஷங்கர் - ரஜினி இணைவது பற்றி...?*

! மனுஷத் தன்மையுடன் மனிதநேயமும் படைத்த ரோபோவாக இருந்தால், சந்தோஷப்படலாம்.

❐ ரூ 100 பரிசு பெறுபவர்:
**கு.கணேசன், பனங்கோட்டூர்**

✱ ரூ 50 பரிசு பெறுபவர்:
**பா.பாலசுப்பிரமணியன், மதுரை**

● இராம. பார்த்திபன், வயலூர்

*? ஈஷா காட்டுப்பூ மாத இதழ் பற்றி...?*

! கண்களுக்கு வண்ணம்; மனத்துக்கு இதம்; அறிவுக்குச் சிந்தனை - காட்டுப் பூ மலர உரமிட்டு நீர் வார்ப்போருக்கு ஈஷா மீதுள்ள ஈடுபாடு பக்கத்துக்குப் பக்கம் தெரிகிறது.

● வெ.ராம்குமார், வேலூர்

*? 'பெண்கள், கடைகளில் காய்கறிகளைப் பார்த்து வாங்குவதைப் போல, கட்சிகளையும் நல்ல கட்சியா என்று எடை போட்டுப் பார்க்க வேண்டும்' என்று விஜயகாந்த் பேசியுள்ளாரே?*

! தாய்க்குலத்தைக் கவரக்கூடிய உவமை தான்! ஆனால், இப்போதெல்லாம் காய்கறிகளைக் கவர்ச்சிகரமாக பாக்கெட்டில் நிரப்பி விற்கிறேன் என்று சொத்தை- சொள்ளைகளையும் சேர்த்து தலையில் கட்டிவிடுகிறார்கள்! பேக்கேஜிங்கைப் பார்த்து ஏமாற வேண்டாம்!



● கு.கணேசன், பனங்கோட்டூர் ❐

*? விடுதலைப்புலிகளுக்கு தமிழகத்திலிருந்து வெடி பொருட்கள், ஆயுதங்கள் கடத்தியவர்கள் கைது குறித்து தினமும் பத்திரிகைகளில் செய்தி வருகின்றதே. இதிலிருந்து என்ன தெரிகிறது?*

! புலிகளுக்கெதிரான எச்சரிக்கை உணர்வு இன்றைய ஆட்சியில் தளர்ந்திருப்பது தெரிகிறது. சில கட்சிகள் பகிரங்கமாகவும் ஆளும் கட்சி மௌனமாகவும் புலிகளுக்கு அனுதாபம் காட்டுவதையும், அனுதாபம் வெகு எளிதில் ஆதரவாக மாறுவதையும் உணர்த்துகிறது.

● கே.ஏ.காளிமுத்து,
இராணிப்பேட்டை

*? 'சிமெண்ட் மூட்டை 200 ரூபாய்க்கு விற்க ஒப்புக்கொண்டது, சிமெண்ட் விலையைக் குறைக்க அரசு எடுத்த முயற்சிக்குக் கிடைத்த வெற்றி' என்று முதல்வர் சொல்கிறாரே?*

! இந்த விலையில் சிமெண்ட் பெற நிபந்தனைகள் இருப்பதால், விநியோக மையங்களுக்கு விண்ணப்ப வரவே குறைவாகத்தான் இருக்கிறது. அரசுக்கு வேண்டுமானால் இத்திட்டம் வெற்றியாக இருக்கலாம். பொதுமக்களுக்கு அல்ல! சிமெண்ட் மட்டுமின்றி எதிலுமே பொது மார்க்கெட்டில், சப்ளை அதிகரித்து விலை குறைய வேண்டும். சிலருக்கு மட்டும் சலுகை விலை என்றால் முறைகேடுகள்தான் அதிகரிக்கும்.

● டி.செல்வன், பூலாங்குளம்

*? ஆட்டுடன் பாட்டும் கேட்ட சென்னை சங்கமம் எப்படி?*

! எளிய மக்களின் மனத்தில் மறைந்து கிடந்த கலையுணர்ச்சியை மீட்டெடுக்கும் வகையில் சிறப்பாக இருந்தது.

● என்.மாணிக்கம், மின்னல்

*? அலங்காநல்லூர் ஜல்லிக்கட்டுக்குப் பதில் வீர விளையாட்டான சிலம்பு, மல்யுத்தம் போன்றவற்றை ஊக்குவிக்கலாமே?*

! உரக்கச் சொல்லாதீர்கள், ஆர்.எஸ்.எஸ். கோபப்படும்! ○



# கடிதம் தந்த வாழ்வு!

அண்மையில் மறைந்த மூத்த ஓவியர் ஆதிமூலம் பற்றிய நினைவுகளை நம்மோடு பகிர்ந்துகொண்டார் ஓவியர் வீரசந்தானம்:

''எண்பதுகளில், நான் வேலையில்லாமல் வறுமையோடு, எனது சொந்த ஊரான கும்பகோணத்துக்குப் பக்கத்திலுள்ள உப்பிலியப்பன் கோயிலில் வசித்து வந்த காலகட்டம் அது. அப்போது ஒரு நாள் என் பெயருக்குக் கடிதம் வருகிறது. 'அன்புத் தம்பி சந்தானத்துக்கு, நெசவாளர் பணி மையத்தின் வடிவமைப்பு ஓவியருக்கான வேலைவாய்ப்பு அறிவிப்பு இன்டியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் வெளியாகி இருக்கிறது. உடனே உன் விவரக் குறிப்புகளை அனுப்பி வை இப்படிக்கு ஆதிமூலம்' என்று அந்தக் கடிதம் முடிந்திருந்தது. பிறகு பம்பாயில் நடந்த நேர்முகத் தேர்வில் வெற்றி பெற்று, அண்ணன் ஆதிமூலம் வேலை செய்த அதே நெசவாளர் பணி மையத்தில் வேலைக்குச் சேர்ந்தேன். இன்றைக்கு நான் மூன்று வேளை பசியில்லாமல் உண்கிறேன் என்றால், அண்ணன் ஆதிமூலம் ஏற்படுத்திக் கொடுத்தது.

என் முதல் மாத சம்பளத்தில் அவருக்கு இனிப்பு வாங்கிக் கொடுத்தபோது, அதற்கான பணத்தை ஆதிமூலமே கடைக்காரரிடம் கொடுத்துவிட்டு, 'உனக்கு வேலை கிடைச்சதுல உன்னைவிட எனக்குத்தான் ரொம்ப சந்தோஷம். உனக்கு வேலை கிடைக்கணும்னு அண்ணிகூட வேண்டிக்கிட்டாங்க...' என்று கூறி, ஒரு தாயின் பரிவோடு என்னை உச்சி முகர்ந்தார். எனக்குப் பெண் பார்த்ததோடு அல்லாமல், அழைப்பிதழில் மதுரை மீனாட்சி திருக்கல்யாணத்தை வரைந்து, தம் சொந்தச் செலவிலேயே அச்சடித்தும் கொடுத்தார். அவருடன் பணியாற்றிய காலத்தை மறக்கவே முடியாது. திருச்சி மாவட்டம் கிராம்பூர் கிராமத்தில் நடுத்தரக் குடும்பத்தில் பிறந்திருந்தாலும், தம் ஓவியத் திறமையால் உலகை வென்றவர். கோட்டோவியத்தின் மூலம் அவர் நிகழ்த்திக் காட்டிய முப்பரிமாண சாதனை, வளர்ந்து வரும் ஓவியர்களுக்கு வரப்பிரசாதம். காந்திஜி குறித்து அவர் நடத்திய ஓவியக் கண்காட்சியை, அப்போதைய முதல்வர் பக்தவச்சலம் திறந்து வைத்துப் பாராட்டினார். ஓவியனுக்கு எப்போதும் நுண்ணிய பார்வையும், வித்தியாசமான சிந்தனையும் வேண்டும் என அடிக்கடிச் சொல்வார். இன்று அவர் நம்மோடு இல்லை. ஆனால், அவருடைய கோடுகளும், தூரிகைகளும் மனதை விட்டு அகல மாட்டா.''

- கபிலன்

ரதி ரூபா என்ற திருநாமம் ராகேந்து வதனா என்பதை அடுத்து வருவது. ரதியினுடைய வடிவத்தைக் கொண்டவள் - அழகான வடிவம் கொண்டவள். பார்க்கும்போதே பரவசத்தைத் தரக்கூடியது ரதியின் வடிவம். அப்படிப் பரவசம் ஏற்படுத்துபவள் அம்பாள்.

**ரதிப்ரியா** - ரதிரூபமாக இருக்கக் கூடியவள் அதே சமயத்தில் ரதிப்ரியாவாகவும் இருக்கிறாள். மன்மதனைத் தன் கண்ணுக்கு மட்டுமாவது தெரியும்படிச் செய்ததற்காக, மன்மதனாலும் ரதியினாலும் ஆராதிக்கப்படக்கூடியவள். அழகினால் ஆராதிக்கப்படக்கூடியவள் என்றும் பொருள் கொள்ளலாம். அழகுக்குப் ப்ரியாவாக இருப்பவள்.

**ரக்ஷாகரி** - எல்லோருக்கும் ரக்ஷகத்தைத் தரக்கூடியவள். ரக்ஷணை என்பதைத் தனது தொழிலாகக் கொண்டவள்.

**ராக்ஷஸ அக்னி** - முந்தைய திருநாமத்துக்கு அப்படியே எதிர்மறைப் பொருளைத் தரும் திருநாமம் இது. சில திருநாமங்கள் இப்படி ரொம்ப அழகாக அமைந்திருக்கின்றன. ஒரு எல்லையைத் தொட்டு, அதன் இன்னொரு பக்கமாக அது மாறினால் என்ன நடக்கும் என்று உணர்த்தும் திருநாமங்கள் அவை.

பக்தர்களாக இருக்கக்கூடியவர்கள், நல்லவர்களாக இருக்கக்கூடியவர்கள், தர்மத்தின் பக்கம் நிற்கக்கூடியவர்கள் - இவர்களுக்கெல்லாம் அவள் **ரக்ஷாகரி.** அதர்மத்தின் பக்கம் போகக்கூடியவர்களுக்கு அவள் 'ராக்ஷஸ அக்னி'.

## 'ராக்ஷஸ'வைத் திருப்பினால்...

ராக்ஷஸ என்கிற சொல் இருக்கிறதே. அது கொஞ்சம் விநோதமான சொல். ராக்ஷஸத்தனம் என்போம். யாராவது சண்டை போட்டாலோ, கொடூரமாகவும் மூர்க்கத்தனமாகவும் இருந்தாலோ ராக்ஷஸத்தனம் என்போம். 'ராக்ஷஸ அக்னி'யில் அக்னியை விட்டுவிட்டு 'ராக்ஷஸ' என்பதை எழுதிப் பார்க்கலாம். தமிழில் எழுதினாலும் சரி, தேவநாகரியில் (வடமொழி லிபியில்) எழுதினாலும் சரி... ரா-க்ஷ-ஸ என்று எழுதிவிட்டு, ஒரு நாளைக்கு மட்டும் தலைகீழாக, வலமிருந்து இடமாகப் படித்துப் பார்ப்போம். இடது பக்கத்திலிருந்து வலது பக்கம் படிப்பதுதான் நம் முறை என்றாலும், கொஞ்சம் வித்தியாசமாகப் படித்துப் பார்ப்போம். அப்படிப் படித்தால், ரா-க்ஷ-ஸ என்பது ஸ-க்ஷ-ரா என்று வரும். ஸக்ஷரா என்பதை வடமொழிப்படி பிரித்தால், ஸ+அக்ஷரா என்று பிரிக்க வேண்டும்.

'ஸ' என்று சேர்த்தாலே 'அதனுடன் கூட' என்று அர்த்தம் வரும். 'ஸ' எதனுடன் சேர்க்கப்படுகிறதோ அதனுடன் சேர்ந்து, இணைந்து என்று பொருள்படும்.

ஸோமாஸ்கந்த மூர்த்தி என்று சொல்கிறபோது, ஸ-உமா-ஸ்கந்த-மூர்த்தி. உமாவுடனும் ஸ்கந்தனுடனும் (முருகன்) சேர்ந்து இருக்கக்கூடிய மூர்த்தம் என்று அர்த்தம்.

ஸ என்பது சேர்ந்தாயிற்று என்றால், முன் இணைப்பாகச் சேர்ந்தாலும் சரி, பின் இணைப்பாகச் சேர்ந்தாலும் சரி. (அனேகமாக அது முன் இணைப்பாகத்தான்

# அதர்மத்துக்கு அக்னியானவள்!

அமையும்) அதனோடுகூட என்று தான் பொருள்.

ஆகவே, ஸ - அக்ஷரா என்றால், அக்ஷரத்துடன் கூடிய என்று பொருள்.

'ஸ' என்பது கொஞ்சம் உயர்ந்த விஷயம் என்பதைக் குறிக்கவும் இணையும்; ஒரு பெயர் அல்லது சொல்லின் முன்னே சேரும். மதி என்றால் நல்ல புத்தி, அறிவு. மதியிலேயே உயர்ந்த மதியை உடையவன் என்கிறபோது சுமதி என்று வரும்.

மித்ரை என்றால் தோழமைத் தன்மை கொண்டவள். ஸௌமித்ரை என்றால், உயர்ந்த தோழமை கொண்டவள்.

ஸ சேர்ந்தாலும் சரி, ஸௌ சேர்ந்தாலும் சரி, வி சேர்ந்தாலும் சரி, அதுதான் அர்த்தம்.

## திசை மாறும் திறமை!

அக்ஷரா என்ற வார்த்தைக்கு, அக்ஷரங்களை நன்றாக உணர்ந்தவர், நன்றாகப் படித்தவர் என்று அர்த்தம். ஸ அக்ஷரம் என்று சொல்கிறபோது நிறையப் படித்தவர், ஆழப் படித்தவர் என்று அர்த்தம். இதே வார்த்தையைப் புரட்டிப் போடுகிறபோது ஒன்று தெரியும் - யார் நன்றாக, நிறைய, ஆழமாகப் படித்திருக்கிறார்களோ அவர்கள் திசை மாறினால், ராக்ஷஸத் தன்மை வந்துவிடும் என்பதைத் தான் அந்த வார்த்தை உணர்த்துகிறது.



நிறையப் படித்தவன் திசை மாறினால், ராக்ஷஸத் தன்மை வந்துவிடுகிறது. ஸாக்ஷரா வாக இருக்கக்கூடியவர் கொஞ்சம் தடம் புரண்டால் ராக்ஷஸ தன்மை.

அப்படியானால், ராக்ஷஸ தன்மை என்பது வேறு எங்கிருந்தோ தனியாக வந்துவிடவில்லை. வீர மகேந்திர புரத்திலிருந்து அது வந்தது என்றோ, இலங்கையிலேயிருந்து வந்தது என்றோ கிடையாது. எந்த மனம் இந்த்ரியங்களைக் கட்டுப்படுத்த முடியாமல் இருக்கிறதோ, அந்த மனம் தர்மத்திலிருந்து புரண்டு போகும்போது, அது ராக்ஷஸ தன்மை கொண்டதாக மாறுகிறது.

அப்படியானால் மனம் சரியான வழியில் போக வேண்டும். அப்படி வெறுமே மனம் சரியான வழியில் போக வேண்டும் என்பதை மட்டும் சொல்லாமல், ஏன் அக்ஷரம் என்கிற சொல் வந்தது என்றால், அதற்கு ஏன் முக்கியத்துவம் என்றால், கல்வி என்பது மனத்தைச் சரியான வழியில்

செலுத்துவதற்கு ஒரு கூடுதல் கருவி.

## சுவாமி சிவானந்தர் சொன்ன கதை

'கல்வியானது எப்படி இருக்க வேண்டும்?' என்று சுவாமி சிவானந்தரிடம் சிஷ்யர்கள் போய்க் கேட்டார்கள். அவர் அதற்கு ஒரு கற்பனைக் கதையைச் சொன்னார். ஆனால், நடந்த மாதிரியே சொன்னார்.

காட்டிலிருந்த மிருகங்கள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து ஒரு நாள் கூட்டம் போட்டன. அவற்றுக்கு ஒரே ஆதங்கம். "உலகில் உள்ள ஜீவராசிகளுள் உயர்ந்தது மனித ஜீவராசிதான் என்று எல்லோருமே சொல்கிறார்களே. ஆனால், மனிதர்களிடம் அப்படி ஒன்றும் நல்ல குணம் இருக்கிற மாதிரி தெரியலையே. இன்னும் சொல்லப் போனால், மனிதர்களிடம் இருக்கிற நல்ல குணத்துக்கு நம்மைத்தானே உவமானமாகச் சொல்கிறார்கள். யாராவது ரொம்ப நன்றியோடு இருந்தால், நாய் மாதிரி நன்றியோடு இருக்கிறான் என்கிறார்கள். வீரமாக இருந்தால், 'சிங்கம் மாதிரி வீரம்' மேம்பட்டவனாக இருக்கும் ஸ்ரீ ராமனை நரசார்தூல என்று அழைத்தார்.

இதுவே காட்டு மிருகங்களுக்கெல்லாம் ஆதங்கமாக இருந்தது. 'யாராவது வேகமாக ஓடினால், குதிரை மாதிரி வேகமாக ஓடினான் என்று சொல்வார்கள். ஆனால், நம்மை எல்லாம்விட இந்த மனிதர்கள்தான் உயர்த்தி என்று ஏன் சொல்கிறார்கள்?' காட்டு மிருகங்கள் எல்லாமாகச் சேர்ந்து கூட்டம் போட்டு யோசித்தும் காரணத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

அந்தக் காட்டில் ஒரு ரிஷி இருந்தார். ரொம்ப நாட்களாகத் தவம் செய்து கொண்டிருந்தார். அவரிடம் போய்க் கேட்கலாமென்று எல்லா மிருகங்களுமாக ரிஷியிடம் போயின.

ரிஷியின் பதில் மூலமாக சுவாமி சிவானந்தர் நமக்குப் பதில் சொல்கிறார்.

"நாய் நன்றியோடு இருப்பது அதன் இயல்பு. கடிப்பது எறும்பினுடைய இயல்பு. வீரமாக இருப்பது சிங்கத்தினுடைய இயல்பு. சீறுவது பாம்பினுடைய

**அறிவினாலும் கல்வியினாலும் தனது தாழ்மையான நிலையை வென்று, நல்ல தன்மையை மனிதனால் கொண்டுவர முடியும்...**

என்கிறார்கள். பகவானையே அப்படித்தான் சொன்னார் விசுவாமித்திரர். ஸ்ரீ ராமனைப் பார்த்து 'உத்திஷ்ட நரசார்த்தூல' என்று சொன்னார். சிங்க உரு கொண்ட நரசிம்ஹ அவதாரத்தை அவர் அப்படிச் சொல்லலை. மானுட அவதாரமான ஸ்ரீராமாவதாரத்தில்தான் மனிதர்களிடையே சார்தூலம் (சிங்கம்) என்று சொல்கிறார் விசுவாமித்திரர். காட்டுக்கு ராஜாவாக சிங்கம் இருப்பது மாதிரி, நாட்டுக்கு ராஜாவாக - மனிதர்களில் இயல்பு. இவையெல்லாம் இயற்கை. ஆனால், மனிதனிடத்தில் சில சமயம் சில குணங்கள் இயல்பாக இல்லையென்றாலும், தனது அறிவினாலும் கல்வியினாலும் தனது தாழ்மையான நிலையை வென்று, நல்ல தன்மையை அவனால் கொண்டுவர முடியும். இந்தத் தன்மையினால்தான் மிருகத்தைவிட மனிதன் உயர்த்தி'' என்றார் சுவாமி சிவானந்தர்.

**(வளரும்)**




# மூலிகை

விஜயலட்சுமி என்றால் யாருக்கும் தெரியவில்லை. 'மூலிகை விஜி' என்றால் கூட்டிப் போய் வீட்டில் விட்டுவிடுகிறார்கள். அந்தளவுக்கு மூலிகைகள் மூலம் தம் புகழை வளர்த்து வைத்துள்ள விஜயலட்சுமி, பார்க்க நம் எதிர்த்த வீட்டு கமலாக்கா மாதிரியே இருக்கிறார்.

''**எ**ன் முதல் பெண் குழந்தை பிறந்து வளர்ந்தபோது, அவள் கைகால்களில் முழுக்க அடர்த்தியான ரோமங்கள். ஆண் பிள்ளைகளுக்குக்கூட அப்படி இருக்காது. நான் ரொம்ப பயந்துவிட்டேன். மிகவும் கவலைப்பட்டு, என் பாட்டியிடம் முறையிட, அவர் அருமையான கைவைத்தியம் ஒன்றைச் சொன்னார்.

அவர் சொன்ன குறிப்புகளின்படி நானே மூலிகைப் பொடி தயார் செய்தேன். என் மகளின் உடல்மீது தினந்தோறும் பூசிவிட்டேன். கொஞ்ச நாட்களிலேயே கை, கால்களில் முளைத்திருந்த அத்தனை ரோமங்களும் உதிர்ந்துவிட்டன. 'குழந்தை முதல் பெரியவர் வரை இதனைப் பயன்படுத்தலாம்' என்று பாட்டி என்னிடம் சொன்னபோதுதான், எனக்குள் அந்த சிந்தனை உதித்தது. 'இதை ஏன் தொழிலாகச் செய்யக் கூடாது' என்று யோசித்து, மூலிகை பவுடர் தயாரிக்கும் பணியில் என்னை ஈடுபடுத்திக்கொண்டேன்'' என்கிற விஜயலட்சுமி, மதுரை நாராயணபுரத்தைச் சேர்ந்தவர்.

''கடந்த ஐந்தாண்டுகளாக வீட்டிலிருந்தபடியே நான்கு வகையான மூலிகை பவுடர்களைத் தயாரித்து, வெளி மார்க்கெட்டில் விற்பனை செய்து வருகிறேன். மதுரையில் சுபிக்ஷா விற்பனை நிலையங்களில் எங்களது தாமரை மார்க் மூலிகை பவுடர்கள் கிடைக்கும். வெளியூர்க்காரர்களுக்கு கூரியர் தபால் மூலம் அனுப்பி வைக்கிறேன். மாதம் பத்தாயிரம் ரூபாய் வருவாய் கிடைக்கிறது. இந்த மூலிகை பவுடர் கிருமி நாசினியாகவும், கொசு விரட்டியாகவும் விளங்கி, எமது வாடிக்கையாளர்களை மலேரியா, டெங்கு, சிக்குன் குனியா போன்ற நோய்களிலிருந்து காப்பாற்றி வருகிறது'' என்கிறார்.

கிருமி நாசினியைத்
தெளித்தால் நல்லதென்பதற்காக
தினமும் டெட்டாலும்,
பினாயிலும் கலந்து வாசல்
தெளிக்க முடியுமா?

# வி ஜி!

"மூலிகைகளை உபயோகப்படுத்தி பெண்களுக்கான குளியல் பவுடரையும் தயார் செய்து வருகிறோம். முகப்பரு, முகத்தில் கரும்புள்ளி, கண்களின் கீழே உருவாகும் கருவளையம் போன்றவற்றை அகற்றிவிடக்கூடியது இது. உபயோகித்த நிறைய பெண்கள் நேரிலும், கடிதம் மூலமாகவும் தங்கள் திருப்தியினை தெரிவித்து வருகின்றனர். இந்த உற்சாகத்தோடு வாசனைக் குளியல் பவுடரையும் தயாரித்து விட்டோம். கஸ்தூரி மஞ்சள், மரிக்கொழுந்து, ஆவாரம்பூ, வெட்டி வேர், ரோஜா இதழ், இன்னும் சில மிக முக்கிய மூலிகைகளைக்கொண்டு இது தயாரிக்கப்படுகிறது. ஆண் - பெண் இருபாலரும் இதனை உபயோகிக்கலாம்.

சீயக்காய் பவுடரும் இருக்கிறது. சீயக்காய் பட்டை மற்றும் ஏழு வகை மூலிகைகளைக் கலந்து அரைத்துத் தயாரிக்கிறோம். இதனை உபயோகிப்பவர்கள் ஷாம்பூ போடத் தேவையில்லை. முடி உதிராது. நல்ல கருமை நிறத்துக்கு உத்தரவாதம். நீண்ட கூந்தல் வளரும். வாரத்தில் இரண்டு நாட்கள் தலைக்குத் தேய்த்துக் குளித்தால் போதும்.

எங்களது தயாரிப்புகளிலேயே முக்கியமானது மூலிகைச் சாண பவுடர். அந்தக் காலத்தில் தெருவில் இருக்கும் கிருமிகள் வீட்டுக்குள் புகுந்து வியாதிகளை உண்டாக்கிவிடக் கூடாதென்பதற்காக வீட்டு வாசலில் மாட்டுச் சாணத்தைத் தெளிப்பார்கள். நமக்கு இயற்கையாகக் கிடைத்து வந்த கிருமி நாசினி அது. இந்த வழக்கம் இன்னமும் கிராமப்புறங்களில் இருக்கிறது. ஆனால், நகரங்களில் மறைந்துவிட்டது. காரணம், மாட்டுச் சாணம் கிடைப்பது அரிதாகிவிட்டதுதான். இன்னொன்று, அடுக்குமாடிக் குடியிருப்பு வாழ்க்கைமுறை. கிருமி நாசினியைத் தெளித்தால் நல்லதென்பதற்காக தினமும் டெட்டாலும், பினாயிலும் கலந்து வாசல் தெளிக்க முடியுமா?

இதற்கு ஒரு மாற்று ஏற்பாடு செய்ய வேண்டுமென்று யோசித்து உருவாக்கப்பட்டதுதான், இந்த மூலிகைச் சாண பவுடர். தூய மஞ்சள், வேப்பிலை மற்றும் சில முக்கிய மூலிகைகளைக் கொண்டு உருவாக்கப்பட்டது. அபார்ட்மெண்ட்டில் வசிப்பவர்கள்கூட தங்கள் வீட்டு வாசலில் இதனைத் தெளிக்கலாம். மொசைக், மார்பிள் தரையாயிற்றே என்று தயங்க வேண்டியது இல்லை. வீட்டுப் பூஜை அறையிலும் தெளிக்கலாம். பூச்சிகள், கிருமிகள் ஏதும் உள்ளே வராது. கொசு விரட்டியாகவும் செயல்படுகிறது.

முற்றிலும் மூலிகைப் பொருட்கள் கொண்டு உருவானதால், இதன் புகை எந்தக் கெடுதலும் தருவதில்லை. மலேரியா, டெங்கு மற்றும் சிக்குன் குன்யா காய்ச்சலை உண்டு பண்ணும் கொசுக்களை விரட்டியடிப்பதில், மூலிகைச் சாண பவுடர் முன்னிலை வகிக்கிறது" என்று கூறும் விஜயலட்சுமி, "என் எல்லா முயற்சிகளுக்கும் என் குடும்பம் உறுதுணையாக இருக்கிறது. குடும்பத் தலைவிகள் சீரியலுக்கு அடிமையாகிவிடாமல் கிடைக்கும் நேரத்தை உபயோகமாகச் செயல்படுத்த ஆரம்பித்தால் நிச்சயம் விண்ணைத் தொடலாம்" என்கிறார்.



செய்திச் சித்திரம்:

**இருள் நீக்கியான்**



# யார் உங்கள் காதலி?

## கிரேஸியைக் கேளுங்கள்

• **எஸ்.கோமதி, நெல்லை**

***கண்ணுல பிரச்னை வந்தால் கண்ணாடி போடலாம். காதுல பிரச்னை வந்தால் ஹியரிங் - எய்டு போடலாம். வாயில் பிரச்னை வந்தால்?***

கண்ணாடி, ஹியரிங் - எய்டு போடும் வயதில், வாயில் வரும் பிரச்னை பொக்கை தான். 'பல்லு போச்சுனா சொல்லு போச்சு'ம் பாங்க. கடவுளாகப் பார்த்து 'இப்பவாவது கம்னு கெட... மௌனம் பழகு' என்று சொல்லாமல் சொல்லி நம் பல்லைப் பிடுங்குகிறார். அதையும் மீறி, எடக்கு மடக்காகப் பேசி, 'வாயால் பிரச்னை' வந்தால், என்ன போடலாம்..? பேசிய வாயில் ஓங்கி ஒண்ணு போடலாம்!

• **எஸ்.ராஜமமைு, சின்னமனூர்**

***பத்திரிகைகளில் கவிதைகள், சிறுகதைகள் எழுதிக் கொண்டிருக்கிறேன். உங்களிடம் உதவியாளராக சேர ஆசைப் படுகிறேன். சேர்த்துக்கொள்வீர்களா?***

எழுத்து என்பது ஒரு தவம். தவம் செய்யத் தனியாகத்தான் போக வேண்டும். உதவியாளரோடு போனால் இஷ்ட தெய்வமும், தன்னுடைய உதவியாளரைத்தான் அனுப்பும் (பிள்ளையாருக்கு பதிலாக கண்டெலி பிரசன்னமானால் ஒப்புக்கொள்வீர்களா?). 'தன் கையே தனக்குதவி' என்று இருந்தால்தான் நமக்குள் இருக்கும் நிஜமான எழுத்தாளன் வெளிப்படுவான். உதவியாளராக இருப்பதைவிட, நம்மை ஆளும் அளவுக்குத் திறமையானவர்களின் உதவியை நாடலாம். உதாரணமாக, சிறுகதை எழுதுபவர்கள் கல்கி, தேவன், ஜெயகாந்தன், சுஜாதா போன்றோரின் படைப்புகளைப் படித்துப் பயனடையலாம். கவிதைக்கு கம்பன், பாரதியார், தேசிய விநாயகம் பிள்ளை, நாமக்கல் கவிஞர் போன்றோரின் கரும்புத் தோட்டத்தில் ஊற, நம் நெஞ்சக் கல் தேய்ந்து கவிதை ஊறும்.

• **த.சத்தியநாராயணன், அயன்புரம்**
***மரம் வச்சவன் தண்ணீர் ஊற்றுவான். மரம் வெட்டினவன்?***
தண்ணியில்லாக் காட்டில் தனி மரமாகத் திண்டாடுவான்!

• **வி.ஸ்ரீதரன், நாட்டரசன்கோட்டை**
***நகைச்சுவைக்கு ஏதேனும் Course உள்ளதா?***
Of Course, உண்டே!

• **ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி**
***சித்திரவதை என்றால் என்னவென்று கொஞ்சம் சொல்லுங்களேன்?***
சித்திரம் என்ற பெயரில் தெய்வத் திரு உருவங்களை வதம் செய்யும் எம்.எஃப். ஹுசைனின் ஒரு சில ஓவியங்கள்!

• **ஏ.எம்.ராஜா, அ.பட்டி**
***நீங்கள் 'ழ'வை சரியாக உச்சரிப்பீர்களா?***

**இப்படிச் சொல்லி அசத்துவீங்கன்னு நான் நினைக்கல சார்!**

வெற்றிலை, சீவல் போட்டு, வாய் தளும்பும் சமயங்களில் நான் ழவை ஓரழுவுக்கு சழியாக உச்சழிப்பேழ்ன்.

• **ஆர்.ஆர்.தமன், சென்னை**
***தொடர்ந்து விழுங்கிக்கொண்டே இருக்கும் தொண்டை நீரை, உமிழ் நீர் என்று சொல்வது முரண்பாடுதானே தலைவா?***
வாயில் இருக்கும் சுரப்பி உமிழ்வதால் அது உமிழ் நீர். அதை விழுங்குவது நீர். ஒன்றை மட்டும் நன்றாக ஜீரணித்துக் கொள்ளுங்கள். Aliveவா இருக்க Saliva தேவை தலைவா!

• **ஆர்.ராஜலட்சுமி, விழுப்புரம்**
***சோகக் கதைக்கு உங்களை வசனம் எழுதச் சொன்னால் என்ன செய்வீர்கள்?***
நகைச்சுவை, சோகம் இரண்டும் எழுத்து என்ற நாணயத்தின் இரு பக்கங்களான பூவா, தலையாதான்! என் அதிர்ஷ்டம் இதுவரை நான் நாணயத்தைச் சுண்டும் போதெல்லாம், எனக்கு என்னைக் கண்டி யிழுக்கும் 'நகைச்சுவை பூதான்' விழுந்திருக்கிறது. என் தலையெழுத்து, நீங்கள் கேட்டதுபோல 'சோகத் தலை' விழுந்தால், என் பெயரை 'கிரேஸி சோகன்' என்று மாற்றிக்கொண்டு விரக்தியாகச் சிரித்தபடி வசனத்தை எழுதிக் கொடுப்பேன்.

• **கே.தாமோதரன், வால்பாறை**
***குரங்குடன் பேச நேர்ந்தால் என்ன கேட்பீர்கள்?***
'நீயாவது சொல்... ராமர் பாலம் கட்டினாரா?' என்று அந்த வானர வழித் தோன்றலிடம் கேட்பேன்.

• **மு.ரா.பாலாஜி, தங்கவயல்**
***கிரேஸி, ஒரு மனிதனை எப்படி எடை போடுவது?***
இது 'தராசிடம்' கேட்க வேண்டிய கேள்வி!



• **அ.ராஜா ரஹ்மான், கம்பம்**
***இப்போதும் தாங்கள் காதலிப்பது யாரை?***
எப்போதும் போல அவளைத்தான்!

# வட்டமேஜை

ஆறு பட ஸ்டில்களுக்கேற்ப காஸ்யா அடித்திருந்த கமெண்ட்டுகள் சீனா கற்கண்டு!

- பரமசிவம், புனலூர்

## சிங்கத்தின் கர்ஜனை!



நீங்கள் எவ்வளவுதான் மூளையில் உறைக்கும்படி எழுதினாலும், இளைஞர் சமுதாயம் திருந்துமா என்பது சந்தேகம்தான்!

- இராமமூர்த்தி, சிதம்பரம்

சீமானின் பேட்டி சீறும் சிங்கத்தின் கர்ஜனை!

- சொ.சுப்பராமன், உறையூர்

'தாரே ஜமீன் பார்' படத்தைப் பாராட்டியுள்ள டாக்டர் ராமதாஸ், திரைப்படங்களுக்குத் தாம் எதிரி அல்ல என்பதை நிரூபித்துவிட்டார்!

- அ.அனீஸ், திருச்சி

கிரிக்கெட்டைப் பற்றி பெர்னாட்ஷா சொல்லிய கருத்தை நினைவுபடுத்துகிற கார்ட்டூன் கலக்கல்!

- இரா.சக்கரபாணி, மதுரை

பக்ளர் பற்றிப் படிக்கும்போதே பக்கென்று இருந்தது.

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

கட்சித் தேர்தல்கள் முறையாக, சொந்த விருப்பு வெறுப்பின்றி நடத்தப்பட்டாலே, கட்சிகளில் ஜனநாயகம் தழைத்தோங்குவது உறுதி! கட்சித் தலைவர்கள் மனம் வைத்துச் செயலில் இறங்குவார்களா?

- இ.முகம்மது உசேன், திருச்சி

எங்களின் பல மருத்துவச் சந்தேகங்களுக்கு ப்ரிஸ்கிரிப்ஷன் பகுதியில் விடை கிடைத்து விடுகிறது. டாக்டர் செலவுக்கு பதில், கல்கி வாங்கினாலே போதும்!

- பி.ஹேமாப்புஜம், சென்னை-17

ஆசை 'போலி சாமியார்' பற்றிய பின்னல் கதை, சூப்பர் நகைச்சுவை.

வி.ஜி.சத்தியநாராயணன், சென்னை

## ஸ்பீட் போஸ்ட்!

'பழனி' பஞ்சாமிர்த விமர்சனங்கள், ரொம்பப் பிடிச்சிருக்கு!

- த.சத்தியநாராயணன், அயன்புரம்

மழை வருகிறதா என்று பார்த்தேன் - திருமா பேட்டி படித்ததும்.

- அ.முரளிதரன், மதுரை

# சாதிக்க வாங்க சாம்பியன்ஸ்!

நீங்கள் பதினாறிலிருந்து பதினெட்டு வயது வரை உள்ள இளைஞரா? அல்லது இளம் பெண்ணா? எனில், இந்தியாவின் பிரதிநிதியாக நீங்கள் லண்டனுக்கோ, ஜப்பானுக்கோ போக முடியும்!

இந்த வாய்ப்பை வழங்குவது பிரிட்டிஷ் கௌன்சில் அமைப்பு. 'இந்திய தட்பவெப்ப சாம்பியன் 2008' என்ற போட்டியில் முதலாவதாக வரும் இருபது இளைஞர்களை, 'மாறிவரும் தட்பவெப்ப நிலைகளால் ஏற்படும் விபரீதமான விளைவுகளைக் களைவதற்கான' தூதர்களாக நியமிக்கப்போகிறது. இந்த இருபது பேரில் மூவர் 'சர்வதேச தட்பவெப்ப சாம்பியன்கள் 2008' என்று தேர்ந்தெடுக்கப்படுவார்கள்! இவர்கள் லண்டனிலும் கோப் நகரிலும் (ஜப்பான்) நடைபெற உள்ள கூட்டங்களில் இந்தியாவின் பிரதிநிதிகளாகக் கலந்துகொள்வார்கள். கோப் நகரில், மாறும் தட்பவெப்ப நிலை குறித்து விவாதிக்க G8. + 5 நாடுகளின் சுற்றுப்புறச் சூழல் அமைச்சர்கள் கலந்துகொள்வார்கள்.

உங்கள் விண்ணப்பப் படிவத்தை உங்கள் பகுதியில் உள்ள பிரிட்டிஷ் கௌன்சில் மண்டல அலுவலகத்துக்கு அனுப்ப வேண்டும். விண்ணப்பத்துடன் கூடவே கீழ்க்கண்டவையும் இணைக்கப்பட்டிருக்க வேண்டும்.

★ உங்களைப் பற்றியும், தட்பவெப்ப மாறுதல் உங்கள் மீது ஏதாவது விளைவை ஏற்படுத்தி இருந்தால் அது குறித்தும், இந்திய தட்பவெப்ப சாம்பியன் - 2008 ஆக நீங்கள் ஏன் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என நினைக்கிறீர்கள் என்பது குறித்தும் ஒரு பாரா (300 வார்த்தைகள்).

★ இந்தியாவின் தட்பவெப்ப மாறுதல் தொடர்பான பிரச்னைகள் குறித்து ஒரு செய்தி அறிக்கை (800 வார்த்தைகள்). இந்த அறிக்கையை நீங்கள் சொந்தமாக எழுத வேண்டும்.

★ மேல் விவரங்களுக்கும், விண்ணப்பப் படிவம் தொடர்பாகவும் www.britishcouncil.org.in என்ற வலைத்தளத்துக்கு விஜயம் செய்யுங்கள். உங்கள் விண்ணப்பங்களை அனுப்ப வேண்டிய இறுதி நாள் பிப்ரவரி 4, 2008.

★ தேர்ந்தெடுக்கப்பட்ட இருபது இந்திய தட்பவெப்ப சாம்பியன்களுக்கு பிரிட்டிஷ் கௌன்சிலின் பாராட்டுப் பத்திரமும் பரிசுகளும் வழங்கப்படும். நூல்கள், டி.வி.டி.க்கள், 'தட்பவெப்ப



முகாமில்' கலந்துகொள்ள அனுமதி ஆகியனவும் இந்தப் பரிசுகளில் அடக்கம். இந்த முகாமில் பங்குபெறும் விஞ்ஞானிகள் மற்றும் தகவல் தொடர்பு மேதைகளோடு இந்த இருபது சாம்பியன்களும் கலந்துரையாடலாம். அங்கு தட்பவெப்ப தகவல் தொடர்பு திட்டமிடல் குறித்த பயிற்சியும் பெறலாம்.

★ இவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் மூன்று 'சர்வதேச தட்பவெப்ப சாம்பியன்கள்' 24 - 30 மார்ச், 2008ல் லண்டனிலும், 18 - 26 மே, 2008ல் ஜப்பானிலும் நடைபெறும் கூட்டங்களில் இந்தியாவின் பிரதிநிதிகளாகப் பங்கேற்கலாம். இவற்றுக்கான பயணச் செலவு, தங்கும் செலவு ஆகியவற்றை நிர்வாகிகளே ஏற்பார்கள்.

– ஆதர்ஷ்

# கிரேட் கிருஷ்ணா!

பாலாஜி, மகன் கிருஷ்ணாவுடன் சென்னை சங்கமம் நிகழ்ச்சிக்குப் போனான்.















உங்கள் பிள்ளையும் 'தகப்பன் சாமி'யா மாறி உங்களுக்கே பல விஷயங்களைச் சொல்லி அசத்த கோகுலம் வாங்கிக் கொடுங்க!

தனிப்பிரதி ரூ.8/-

ஓர் ஆண்டு சந்தா ரூ.96/-

இப்போது கடைகளில் பிப்ரவரி 2008

# கோகுலம்

இதை எம்.ஓ., டி.டி. அல்லது உள்ளூர் காசோலையாக அனுப்ப வேண்டிய முகவரி
சர்க்குலேஷன் மேனேஜர்,
கோகுலம் - தமிழ்
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.

பிப்ரவரி-10-மதுரையில்

# முதல் அரசியல் மாநாடு



பசுமையான
தமிழகம் !
பலமான
பாரதம் !
உருவாக்கிட

## சமத்துவ தலைவர்

அழைக்கிறார்

வாரீர் ! வாரீர் !!

**அகில இந்திய சமத்துவ மக்கள் கட்சி**

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57* Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG s Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.






ஆயுர்வேதம்
ஆரோக்கியத்தின் உரைகல்

**Team Eubio Care** (Division of CAL)

வழங்கும்

# ஒற்றை மூலிகை நிவாரணம்

பாரம்பரிய ஆயுர்வேதத்தின்
அடிப்படையில்.

பாரம்பரிய ஆயுர்வேதத்தின் அடிப்படையில்
தற்கால ஆராய்ச்சிகளையும் மேற்கொண்டு,
Team Eubio Care வழங்கும் ஒற்றை மூலிகை நிவாரணம்.
காப்ஸ்யூல்களாக !



ஆம்லாகி | குகுளு | அர்ஜுனா
பில்வா | குடுச்சி | ஷிள்ளாகி

To be used as directed by the Physican

AVAILABLE ONLY AT

Team Health Shoppe For Wellness

வண்டலூர்: ஜி.எஸ்.டி. ரோடு. (Vandalur Zoo அருகில்) Ph: 2275 0502 / அண்ணாநகர்: பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, சென்னை - 40. Ph: 4269 3332 / இந்திரா நகர்: 3வது அவென்யு, எண்.26, தரைதளம், கார்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், சென்னை - 20. Ph: 4269 5115 / புரசைவாக்கம்: எண்.238, பேஸ்மெண்ட், பிரின்ஸ் டவர்ஸ், அபிராமி மெகாமால் எதிரில் புரசைவாக்கம் ஹைரோடு, சென்னை - 10. Ph: 4542 8898 / தி.நகர்: ப்ளாட் 2, பழைய 60, ... அபார்ட்மெண்ட், ... ரோடு, தி.நகர் பாரதிராஜா மருத்துவமனை பின்புறம், ஜி.என்.செட்டி ரோடு